6-வது, சிலந்தியின் வாய்.

இது பட்டவிடத்தில் முருக்கம்பூவைப்போல் நிறமுள்ள விரணம்பிறந்து அதில் குத்தலும் ஊறலுமுண்டாகும்.

7-வது, சிலந்தியின் வாய்நீர்.

இது பட்டவிடத்தில் புங்கின்பூவைப்போல் நிறமுள்ள விரணம்பிறக்கும் அவ்விரணத்தின் பக்கங்களில் பூச்சி யூருவதுபோல் பறபறத்தலும் ஊசியால் குத்துவதுபோல் குத்தலும் எரிச்சலுமுண்டாகும்.

8-வது, சிலந்தியின் ஸ்பரிசம்.

இது தேகத்தில் பட்டாலும் இப் பரிசத்தைப்பெற்ற வஸ்திரம்பட்டாலும் முற்கூறியகுணங்களெல்லாம் விரைவிலுண்டாகும்.

சிலந்திப்பூச்சியின் விஷநிதானம் முற்றிற்று.

---

## சகல சிலந்தி விஷத்திற்கும்

### ஔஷதம்.

மேற்கூறிய சகல சிலந்திவிஷங்களுக்கும் சங்கம்வேர்ப்பட்டை மிளகு இவ்விரண்டையும் வகைக்குப் பலம் கால்வீதமாக நிறுத்து மெழுகுபோலரைத்துப் பசுவினது நெய்யும் குழைத்து 21-நாள் இரண்டுவேளையும் சாப்பிட்டு இச்சாபத்தியமிருக்கில் தீரும் அல்லது நரிப்பல்லைத் தூளாக்கி அதில் கற்றாழைரசத்தை விட்டு நன்றாயரைத்து கடிவாயிலும் தேகமுற்றிலும் 21-நாளைக்கு 3-வேளையும் லேபனம்பண்ணத் தீரும் அல்லது அவுரியினது சமூலமும் பலம் 1-ஆக நிறுத்து அதில் நல்லஜலம் அரைப்படி விட்டு காலாழாக்கு கியாழமாகக் காய்ச்சி 7-நாள் இரண்டுவேளையும் சாப்பிடத் தீரும் இவ்வாறே மும்முறை கொடுக்கவேண்டும் அல்லது சிறுசின்னியிலை ரசம் கால் அளவாக இரண்டுவேளையும் 7-நாள் 3-முறை சாப்பிட்டு உப்பிலாப்பத்தியமிருக்கில் விலகும்.

## மீன்விஷம்.

சில மீன்கள் கடிக்கில் நோயும் எரிச்சலுமுண்டாகும் அன்றியும் நீர்வண்டு சுழல்வண்டு பாசிவண்டு பெரியவண்டு முதலிய சில விஷமுள்ளவைகள் கடிக்கி லவ்விடத்தில் வீக்கம் நமைச்சல்

நோய் நுரைத்த பேதி சரீரத்தில் தடிப்பென்னும் இக்குணங்களுண்டாகும் இவ்விஷம் பச்சை நன்னாரிவேரை மேல்தோலும் உள்நரம்புபோக்கி கொட்டைப்பாக்குப்பிரமாணம் அரைத்து கற்றாழைச்சோற்றில் கலந்து 40-நாள் அந்தி சந்தியி லருந்தத் தீரும் இதற்கு இச்சாபத்தியம்.

---

## நாட்டு மரவட்டை.

இது கடிக்கில் வியர்வைநோய் சரீரம் தடித்தல் வீக்கம் கருப்பகத்திப்பூநிறம்போல் பொடிச்சிரங்குகளெழும்புதல் பிரமையென்னும் இக்குணங்களுண்டாகும் இவ்விஷம் திரிகடுகு அல்லது காட்டுவாகைப் பஞ்சாங்கமென்பது வேர் மேல்பட்டை இலை பூ காய் ஆகிய இவ்வைந்தில் யாதேனும் ஒன்றை வெந்நீரிலரைத்துப் பிழிந்து வடிகட்டி நசியமும் லேபனமும்செய்து உள்ளுக்குக் கொடுக்கில் முறியும் இது மற்றைய அட்டைகட்கும் உதவும் இதற்குச் சதபதியென்றும் பெயர்.

---

## விருச்சிகோற்பத்தி.

சர்ப்பங்கள் செத்தழிந்தவிடத்திலும் சாணம் கோணிப்பட்டை முதலியவை மக்கினவிடத்திலும் மயானத்தின் சாம்பலிலும் பிறக்கும் இதுகள் முறையே வெளுத்தும் கருத்தும் சிவந்துமிருக்கும் இவற்றின் விஷம் பேறினால் நாவு தடித்தல் தேகமரத்தல் அதிகநோய் நாசியால் ரத்தம்விழுதல் சர்வாங்கத்திலும் வியர்வை மூர்ச்சை வாயுலரலென்னும் இக்குணங்களுண்டாகும் இது மந்திரவலி ஔஷதவலி தெய்வவலி இம்மூன்றும் ஒத்துக்கொள்ளில் பிறக்கும் விருச்சிகமென்பது தேள்.

---

## சாதாரண தேளின்பேதம்.

தேளானது உச்சிலிங்கத்தேள், வாதத்தேள், பித்தத்தேள், சிலேஷ்மத்தேளென நான்குவிதப்படும் அன்றியும் நண்டுவாய்க்காலி ஒன்றுண்டு.

### 1-வது, உச்சிலிங்கத்தேள்.

இது பகற்காலத்தில் கொட்டும் இவ்விஷத்தினால் அவ்விடத்தில் வீக்கம் நரம்புகளில் மிகுவேதனை ரோமசிலிர்ப்பு அதிக சீதளமென்னும் யிக்குணங்கள் உண்டாகும் இது மந்திரத்தால் வசப்படும்.

### 2-வது, வாதத்தேள்.

இது மார்புநோய் மேல்சுவாசம் எனும்பு நரம்பு கில் இவைகளில் நோய், தேகங் கருத்தல் கூச்சல் பிரளல் முதலிய குணங்களையுண்டாக்கும்.

### 3-வது, பித்தத்தேள்.

இது அறிவுநீங்குதல் சுடுகையான மேல்மூச்சு வாயானது காரமாயிருக்குதல் முகத்தில் எண்ணெய்தடவினதுபோல் பளபளப்பு மாமிசங் கரைதல் சோஷையென்னு மிக்குணங்களை யுண்டாக்கும் அன்றியும் அவ்விடத்தில் வியர்வை கவுட்டியில் நெறிகட்டுதல் எரிச்சல் கடுத்தல் மறுநாள்வரைக்கும் நோதலென்னும் இக்குணங்கள் உண்டென்பாருமுளர்.

### 4-வது, சிலேஷ்மத்தேள்.

இது வாந்தி, அரோசகம், மார்பு அதிரல், வாயில் ஜலம்வடிதல், பீனிசம், சரீரமுற்றிலும் வாழைத்தண்டையொத்த சீதளம், வாயினிப்பென்னும் யிக்குணங்களை யுண்டாக்கும் இவ்விஷங்கள் உலர்ந்த கோழிமலம் நெருப்பிலிட்டு கடிவாயில் புகைபிடிக்க யிறங்கும் அல்லது கருநாபியைத் தண்ணீரிலுரைத்து கொட்டின வாயில்போடத் தீரும் அல்லது பூனைக்காஞ்சான் சொறிச்சாரும் முருககிலைச்சாரும் கொட்டுவாயில் வேதுபிடிக்கக் குளிரும் அல்லது வெண்குன்றிவேரை வெந்நீரிலரைத்துப் பிழிந்து வடிகட்டிப் பஞ்சிலூட்டிக்கொண்டு இடதுபக்கங் கொட்டினால் வலதுநாசியிலும் வலதுபக்கங்கொட்டின லிடதுநாசியிலும் நசியம்பண்ணத் தீரும்.

## நண்டுவாய்க்காலி.

இது கொட்டினால் வியர்வையும் நெறிகட்டுதலும் வீக்கமும் கடுப்பும் குடைச்சலும் எரிச்சலும் குமுறலும் வாயில் நுரையும் உண்டாகும் இந்த விஷம் எட்டிவேர்பட்டையை பெருநெல்லிக்காய்ப்பிரமாணம் அரைத்து அரையாழாக்கு வெந்நீரில் கரைத்து உள்ளுக்குக் கொடுத்து கொட்டின வாயில் கத்தரிக்காயைச் சுட்டுக் கட்டினால் தீரும்.

## மூஷிகபேதம்.

மூஷிகமென்பது 18-வகைப்படும் அவையாவன லாலஜம் சாளம் புண்டரம் ஹரிதம் சிகுரம் அசிதம் கஷாயதந்தம் குநகம் கோகிலம் கபிலம் கிரிஷ்ணம் அருணம் சபலம் சுவேதம் சுபோதம் உந்துரு பலினி ரசாலம் என்பனவாம் அன்றியும் சுகந்தரியென்பது ஒன்றுண்டு இதுவே மூஞ்சூறு மூஷிகமென்பது எலி.

மூஷிகபேதமென்னும்

## எலிவிஷவகுப்பு.

### 1-வது, லாலஜ எலி.

மிகுந்த அலைச்சலை உடையதாயிருக்கும் இது கடிக்கில் வாந்தி மூர்ச்சை வாய்நீரூறலென்னும் யிக்குணங்களுண்டாகும்.

### 2-வது, சபள எலி.

பல நிறத்தைப் பெற்றிருக்கும் யிது கடிக்கில் திரிதோஷகுணத்துடன் வாந்தி மிகுந்த மூர்ச்சை அதிகதாகமென்னும் யிக்குணங்களுண்டாகும் சபளமென்பது பலநிறமாம்.

### 3-வது, புண்டர எலி.

பேய்க்கரும்பின் நிறத்தைப் பெற்றிருக்கும் யிது கடிக்கில் சரீரம் வெளுறலும் அக்கரும்புவர்னமுள்ளவிரணமுமுண்டாகும்.

### 4-வது, ஹரித எலி.

மஞ்சள்நிறத்தைப் பெற்றிருக்கும் இது கடிக்கில் அக்கினி மந்தமும் கோட்டாவியும் மயிர்க்கூச்செரிதலுமுண்டாகும்.

### 5-வது, சிகுர எலி.

தேகமூற்றிலும் மூறைத்த ரோமங்களைப்பெற்றிருக்கும் இது கடிக்கில் தலைநோய் வீக்கம் வாந்தி பிரமை தேகமூற்றிலும் மச்சமென்னு மிக்குணங்களுண்டாகும் சிகுரமென்பது ரோமம்.

### 6-வது, அசித எலி.

உதட்டில் கரியநிறத்தைப் பெற்றிருக்கும் இது கடிக்கில் சரீரங் கருத்தலும் மூர்ச்சையும் வாந்தியும் மார்நோயு முண்டாகும்.

### 7-வது, கஷாயதந்த எலி.

சிவந்த பற்களைப் பெற்றிருக்கும் இது கடிக்கில் சதா உறக்கமும் மார்பு வளரலும் மலபந்தமும் உண்டாகும் இதனைத் தூங்கெலியென்பர்.

8-வது, சூநகஎலி.

மரக்கால்போல் உடலைப் பெற்றிருக்கும் இது கடிக்கில் சிவந்த மச்சங்களுடன் நோயுண்டாகும் சூநகமென்பது மரக்கால்.

9-வது, கோகிலஎலி.

குயில்போல் புள்ளிகளைப்பெற்றிருக்கும் இது கடிக்கில் கிரந்தியும் உக்கிரமான சுரமும் தாகமுமுண்டாகும் கோகிலமென்பது குயில்.

10-வது, கபிலஎலி.

கபிலநிறமுள்ள யிது கடிக்கில் கண்டுகண்டாகவெழும்பி விரணமாகும் இதனால் சுரம் பிரமை வாந்தியென்னு மிக்குணங்கள் உண்டாகும்.

11-வது, கிருஷ்ணஎலி.

கரியநிறத்தைப் பெற்றிருக்கும் இது கடிக்கில் தினந்தோறும் ரத்தவாந்தியும் மழைக்காலத்தில் அதிக ரத்தம் வீழ்தலும் உண்டாகும்.

12-வது முதல் 17-வரையில் அருணாதி எலிபேதம்.

அருணம் சபலம் கபோதம் சுவேதம் உந்துரு பலினி ஆக ஆறுவித எலிகளுங் கடிக்கில் திரிதோஷம் அதிகரித்து சந்நிபாத குணங்கள் அதிகரித்தலுடன் கடித்தயிடத்தில் ரத்தம்வடிதல் கிரந்திகளெழும்புதல் காதின்கீழ் கட்டிகள்பிறக்குதல் என்னு மிக்குணங்களுண்டாகும்.

18-வது, ரசாலஎலி.

நாமக்கரும்புநிறமாயிருக்கும் இது கடிக்கில் நெஞ்சு மரத்தலும் சொல்லக்கூடாத வேதனையுமுண்டாகும் சகல எலிவிஷங்களும் தேகத்தி லடங்கியிருந்து மழைமேகம் யெழும்புகிறகாலத்திலதிகரிக்கும் பெருச்சாளிக்கும் இவ்விஷம் உண்டு ரசாலமென்பது நாமக்கரும்பு.

எலிவகுப்புகள் 18-ம் முற்றிற்று.

---

சுசுந்தரி.

இது கடிக்கில் சரீரமினைத்தலும் பேதியும் வாய் பேசக்கூடாத்தாயு முண்டாகும் இதற்கு நீலி குடிநீர் ஆகும்.

### எலிச்சுக்கில விஷநிதானம்.

எலிகள் புணருங்காலத்தில் அச் சுக்கிலம் யார்மீதாவது சித றுமாகில் அந்தயிடத்தில் கிரந்தி வீக்கம் மச்சங்களெழும்புதல் பிர மை அரோசகம் குளிர்காய்ச்சல் கில்நோய் நடுக்கல் ரோமச்சிலிர் ப்பு மூர்ச்சை சிலேஷ்மாதிக்கம் வாந்தி தாகம் முதலிய குணங்க ளுண்டாகும்.

### அசாத்திய எலிவிஷலட்சணம்.

எந்த எலியினலாவது மயக்கம் தேகவீக்கம் மாறுருவம் வி பர்லை காதுமந்தம் சுரம் தலைநோய் வாய்நீரூறல் ரத்தவாந்தியெ ன்னு மிக்குணங்களுண்டாகில் அசாத்தியமே.

### மேற்கூறிய எலிவிஷங்களுக்கு சிகிச்சை.

இருமல் இரைப்பு கோழை வாந்திமுதலிய துர்க்குணங்களை பிறப்பிக்கிற எலிவிஷத்திற்கு அழிஞ்சிவேர்ப்பட்டையை புன்ன க்காய்விதம் வெந்நீரிலரைத்து 8-நாள் இரண்டுவேளையுங்கொடுக் கில் தீரும் குறட்டையெலி சண்டையெலி யிவைகளின்விஷம் இல ந்தைக்காயளவு பனைவெல்லத்தில் 8-துளி எருக்கம்பால்விட்டு மத்தித்து 7-நாள்சாப்பிடத் தீரும் வயற்றில் ரத்தப்பாய்ச்சலையும் பல்லுகளில் குடைச்சலையும் தருகின்ற எலிவிஷத்திற்கு அவுரிவே ரை நெல்லிக்காயளவு அரையாழாக்குபாகம் பாலிலரைத்து கரை த்து 8-நாள் உள்ளுக்குக்கொடுத்து அந்தயிலையை அரைத்து கடி வாயில் தவாலையிடத் தீரும் இன்னும் நீலக்காக்கணம்வேரைச் சிறிய கொட்டைப்பாக்குப்பிரமாணமாக அரைத்து காலையில்மா த்திரம் 7-நாள் அல்லது 5-நாள் சாப்பிடத் தீரும் இவைகட்கு உப்பிலாப்பத்தியம்.

---

## சகலஎலிவிஷத்திற்கும்வேறுவகை.

### அதுகள் கடித்ததற்கு ஔஷதம்.

திருவடிவிளக்கன் வாரபுத்திரன் உதிரமண்டலி அருணன் குலத்தன் மந்திரி முத்திரையன் உத்திரியன் விரிசெங்கன் விசை பன் அலியன் உத்தமன் இவை 12-க்கும் அதின் குணமும் ஔ ஷதமும் இதனடியிற்காண்க.

திருவடிவிளக்கன் எலி.

இது கடிக்கில் கண்சிவந்து தேகம் சொரியாகும் கோரைக்கி ழங்கென்னும் முத்தகாசும் இந்துப்பும் தேனில்கொடுக்கவும்.

மாரபுத்திரன் எலி.

இது கடித்தால் சரீரத்திற்குள் வெதும்பும் எரிக்கும் தலைச் சுண்டு வாய் நாற்றமாகும் இதற்கு வாகைப்பட்டையும் அதின் விரையும் தேனிலரைத்துக் கொடுக்கவும்.

உதிரமண்டலி எலி.

இது கடித்தால் சிறுநீர் ரத்தம்போலிறங்கும் கடிவாயில் வட் டம்போலிருக்கும் இதற்கு மஞ்சள் பற்பாடகமும் நெய்யிலரைத் துக் கொடுக்கவும்.

அருணன் எலி.

இது கடிக்கில் உடம்பு கறுக்கும் இருமல் தேக மிளைக்கும் அதற்கு முத்தக்காசும் பற்பாடகமும் தேனிலரைத்துக் கொடு க்கவும்.

குலந்தன் எலி.

இது கடிக்கில் உடம்பு குளிர்ந்து நடுக்கங்காணும் அதற்கு செஞ்சந்தனம் தேனிலரைத்துக் கொடுக்கவும்.

மந்திரி எலி.

இது கடிக்கில் சொரியாகி தினவாகும் பாவட்டம் யிலை மா டப்புறா எச்சம் இவைகளை அரைத்து முகத்திலும் காதிலும் பூசி காக்கணவேர் கருவேல்பட்டை வில்வவேர் சமன் தேனிலரைத் துக் கொடுக்கத் தீரும்.

முத்திரையன் எலி.

இதுகடித்தால் உடம்பு வெண்குட்டமாகும் அதற்கு வாகை விரையைச் சூரணித்து தேனில் கொடுக்கவும்.

உத்திரியன் எலி.

இது கடித்தால் உடம்பில் கொப்பளங்களாகும் அதற்கு தக ரவிரையை காடியிலரைத்துப் பூசி உள்ளுக்குக்கொடுக்கத் தீரும்.

விரிசங்கன் எலி.

இது கடித்தால் காது கேளாது வீங்கும் உடம்பெரியும் அ தற்கு கடுகுரோகணியும் கற்கண்டும் கொடுக்கத் தீரும்.

### விசையன் எலி.

இது கடித்தால் வாய்நீருண்டாகும் வீங்கும் உடம்புமுற்றும் சிலிசிலிர்க்கும் அதற்கு நாழி உளுந்தும் அரிசியும் விளாங்காய்ச் சதையுமறைத்து நெய்யில்குழைத்து உடம்பிலுந் தலையிலும் பூச நீங்கும்.

### அலியன் எலி.

இது கடித்தால் உடம்பு தத்துபோல்காணும் வீங்கும் கண் கறுக்கும் அதற்கு சிறுகீரைவேரை தேனில்குழைத்துக் கொடுக்கவும் தீரும்.

### உத்தமன் எலி.

இது கடிக்கில் திரேகமெங்கும் கொப்பிளமாகும் அதற்குப் பாவட்டமிலைச்சாறும் புறா எச்சமும் தேனில் மத்தித்துக்கொடுத்து உடம்பிலும் பூச நீங்கும்.

மேற்கண்ட நாமமுடைய எலி கடித்தால் மேற்கண்டவிதமாக நோய்கள் காணுவதால் மேற்கண்டபடி அவிழ்தங்களை 10 15-நாள் கொடுக்க நிவர்த்தியாகும் அப்படி வியாதிகளைக் கவனித்துப்பாராமல் மேகசம்பந்தவியாதிகளென்று மதித்து பலவாறான அவிழ்தங்களைக் கொடுப்பதில் வியாதிகள் நீங்காமற்போவதுடன் அவிழ்தங்கள் புகன்ற முன்னோர்கள்பேரில் பிழைகூறுவது வீணல்லவா.

## எலிகளின் கடிவிஷக்குறிகள்.

### அவைகட்கு நிவர்த்திகள்.

(எலிகடி) பல்லில் வலியும் உளையும் இரத்தமுங்கண்டால் அவுரிவேரை ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் அறைத்து ஆவின்பாலில் ஏழுநாள் கொடுக்கத் தீரும்.

### தேகத்தில் கோப்பிளங்கண்டால்.

பெருமரப்புட்டை யிலை வேர் இம்மூன்றையும் சமனாயிடித்துச் சூரணித்து ஆவின்வெண்ணெய்யில் மத்தித்து கால்மண்டலங் கொள்ளத் தீரும்.

### சுவாசவாசங்கண்டால்.

சங்கு வெள்ளைக்காக்கட்டான் இவ்விருவகை வேர்களையும் அறைத்து ஆவின்பாலில் கொடுத்துவரத் தீரும்.

## உடல் பூரித்து இருமல் இளைப்புங்கண்டால்.

கோரைக்கிழங்கைச்சூரணித்து திரிகடிப்பிரமாணம் தேனிற் சாப்பிட்டுவந்தால் தீரும். இறங்கழிஞ்சிவேர்ப்பட்டையை ஒரு புன்னைக்காய்ப்பிரமாணம் அரைத்து வெந்நீரில் ஏழுநாள் காலையில் கொடுக்கத் தீரும்.

## இருமல்கண்டால்.

நாயுருவிசமூலம் அரைத்து ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் சாப்பிட்டுவரத் தீரும்.

## இரைப்புகண்டால்.

மூக்கரைச்சாரணைவேரை ஆவின்பாலில் வேகவைத்து உலர்த்திச் சூரணித்து திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டுவரத் தீரும்.

## உடல்வெதும்பித் திகைத்தால்.

தூதுளைக்காயும் சீனியும் அரைத்து சாப்பிட்டுவரத்தீரும்.

## உடல் வீங்கினால்.

நீலக்காக்கட்டான்வேரை ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் அரைத்து ஆவின் மோரில் கொடுக்கத் தீரும் அவுரிச்சாற்றை தேகத்திற் பூசவும்.

## கைகால் வராவிட்டால்.

அவுரிவேர் சங்கம்வேர் இவ்விரண்டையும் சூரணித்துத் திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டுவரத் தீரும்.

## உடலிற் கழலைபோலும், பலாவித்துபோலும் தடித்தால்.

வெல்லத்தில் ஏழுதுளி வெள்ளெருக்கம்பால்விட்டு ஏழுநாள் கொடுக்கத் தீரும் எருமைச்சாணிப்பாலை மாகாணிப்படிவீதம் மூன்றுநாள் கொடுத்து அந்தச் சாணியை வறுத்து ஒத்திடச்செய்யவும் வெள்ளை ஆதளைக்கிழங்கை யரைத்து கொட்டைப்பாக்குப்பிரமாணம் வெந்நீரில் ஏழுநாள் கொடுக்கத் தீரும்.

## முகத்தில் கருவங்குபோலும் தேகத்தில் குஷ்டம்போலும் தழுதணையைப்போலும் விழுந்தால்.

ஆடுதீண்டாப்பாளைவேர் சங்கம்வேர் இவ்விரண்டையும் சூரணித்து கால்மண்டலங்கொள்ளத் தீரும்.

கைகால்உளையும், கண்சுருங்கும், உடம்பிற் சுழலைபோற்கட்டி
தினவேடுக்கும், வெடித்துப் புண்ணுகும்.

| | |
|---|---|
| சித்திரமூலம் | குழப்பாலை |
| சிவன்வேம்பு | வெள்ளறுகு |

இந்நான்கையும் சூரணித்து திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டு வரத் தீரும்.

உடல்குளிர்ந்து நடுங்கி கடிவாய் வட்டமாயிருந்தால்.

செஞ்சந்தனம் திப்பிலி இவ்விரண்டையும் பொடித்து திரிகடிப்பிரமாணம் தேனிற்கொள்ளத் தீரும்.

கால்கை முடங்களுக்கும்.

அமுக்குராக்கிழங்கைச் சூரணித்து திரிகடிப்பிரமாணமாக தேனில் ஒருமண்டலங்கொள்ளத் தீரும் மேற்படி கிழங்கையறைத்துப் பூசிவரத் தீரும் அவுரிசமூலம் இடித்து சாறுவாங்கி மாகாணிப்படிவீதம் உள்ளுக்குக்கொடுத்து அந்தச் சாற்றை உடம்பெங்கும் பூசி முறுக்கச் சகல எலிகளின் விஷம் நீங்கும் வீழிவேரை அறைத்து ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் வெந்நீரில் மூன்றுநாள் கொடுக்கத் தீரும் பேய்ப்பீர்க்கிலைச்சாற்றை மாகாணிப் படிவீதம் மூன்றுநாள்கொடுக்க சகல எலிகளின்விஷந்தீரும் இதுகளுக்குப் பத்தியம் உப்பு புளி தள்ளவும்.

---

## நாய்கடிக்கு.

நாராக்கஸ்தை நன்னரி சென்னயுருவி இந்த மூன்றிலையும் எள்ளும் புகையூராலும் சேர்த்தறைத்து கடிவாயிற்பூசவும் மேலும் கோவையிலையை அறைத்துப் பூசவும் சுண்டையிலையையும் உப்புமறைத்துப் பூசினுலுந் தீரும்.

நாய், நரி, சிறுபுலி, குரங்கு, பூனை, குதிரை, முதலை,
வேங்கை முதலிய கடிவிஷத்திற்கு.

அவுரிவேரை ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாண மறைத்து ஆவின்பாலிற்கலக்கி மூன்றுநாள்தொடுத்து அந்தவேரையறைத்து

கடிவாயிற்பூசத் தீரும். வீழியிலைச்சாற்றை மூன்றுநாள்கொடுக்கத் தீரும் கொல்லங்கோவைக்கிழங்கை ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் அறைத்து வெந்நீரில் மூன்றுநாள்கொடுத்து அதையறைத்து கடிவாயிற்பூசவும்.

மனிதர், பேய்நாய், பேய்நரி, பெருச்சாளி,

எலிக்கடிகளின் விஷத்திற்கு.

இறங்கழிஞ்சிப்பட்டையை ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் வெந்நீரிற்கலக்கி மூன்றுநாள் காலையில் கொடுக்கத் தீரும் மேற்படி மருந்தினுல் வாந்தி பிராந்திகண்டால் சுக்கு மிளகு வசம்புக்கரி இந்த மூன்று வகையொன்றுக்கு விராகனிடை 1, முருங்கையீர்க்கு ஒருபிடி இவைகளைச் சிதைத்து அறைப்படி தண்ணீரிற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்துக்கொடுக்க வாந்தி நிற்கும்.

# பேய்நாய்.

இது கடித்தால் அவ்விடத்தில் விரணம்பிறக்கும் இதனுல் சாதுநஷ்டம் வாய்நீரூறல் கண்மயக்கம் காதுமந்தம் தேஜசுநீங்குதல் தாள்பிடிப்பு சிரோபாரம் தூங்கும்போது அவ்விரணத்தில் நின்றும் கறுத்த ரத்தம்வடிதல் மார்நோய் சுரம் தேகம்மறத்தல் தாகம் மூர்ச்சையென்னு மிக்குணங்க ளுண்டாகும் இதற்குக் கற்ருழைமடலும் லவணமும் சமமாக யிடித்து கடிவாயில் மூன்றுதினம்கட்டுவதுந்தவிர பேயத்திவேர் ஆலம்பட்டை வேப்பிலை மூன்றும் வகை 1-க்கு பலம் 10-ஆக கூட்டி யிடித்து ஒருபடி கழுநீர் போட்டு கொதிப்பித்துக் குழம்பாயிறக்கி ஏழுநாள் மேலில்பூசி மருந்தால் விரோசனமும் செய்விக்கத் தீரும்.

சகல மிருகஜெந்துக்களின் விஷநிதானம்.

குதிரை புலி கரடி காட்டுப்பன்றி கோனுய் நரி பூனை மாயப்பூனை குரங்கு கீரி முதலை முதலிய ஜெந்துக்கள் கடிக்கில் அந்தக்கோரைத்தந்தங்களி லிருக்கின்ற விஷத்தினுல் தினவு உருவபேதம் நோய் நித்திரையில் வியர்வையொழுகுதல் சுயம்பிரமை தாகம் வீக்கம் கிரந்தி மயக்கம் கடிவாயில் மச்சமும் அதன்மேல் கொப்பிளமும் எழும்பிப் புடையும் அநேகரோகமும் பிறக்குதலென்னு மிக்குணங்களுண்டாகும் இவைகட்கு உடனே ரசகந்தக

பாஷாணவருக்கம்சேர்ந்த விஷமருந்துகளைக் கடிவாயில்வைத்துக் கட்டி அந்தயிடத்தில் ரோமங்கள் முளைக்கவொட்டாத விரணஞ் செய்வித்து அதைக் காலாதீதத்தில் ஆற்றுவதுந்தவிர அந்த அவுஷதங்களை உள்ளுக்குக் கொடுப்பிக்கில் மேற்படி விஷம் சாத்தியமாம் இவ்வளவு பெரிய சிகிச்சைகளைச் செய்வானேனென்றால் அவ்விஷங்கள் அற்பமேனும் தேகத்தில் தங்கியூறுமாயின் பின்பு சகல துற்குணங்களும் பிறக்கும் ஆதலால் செய்யவேண்டும் இது தப்பிக் காலாதீதச்சிகிச்சை செய்யில் விஷமுமுதிர்ந்து அந்தந்த ஜெந்துக்களின் நடை குரல் பார்வை சேஷ்டை முதலிய குணங்களும் பிறக்கும் அப்போது அசாத்தியமாம்.

தந்த நகவிஷ நிதானம்.

பசு முதலிய மாடுகளுக்கும் மனிதர்களுக்கும் பல் நகம் இவைகளில் விஷமுண்டு அவைகள் பட்டு விரணம்பிறந்தால் அதில் வீக்கத்துடன் ரத்தம்வடியும் இதனால் சுரமுண்டாகும் இது அசாத்தியமாம்.

சகலவிஷ உபத்திரவநிதானம்.

சகல விஷங்களுக்கும் சுரம் இருமல் இளைப்பு வாந்தி விக்கல் மயக்கம் தாகம் சரீரத்தில் கடினத்துவம் வயறுப்பிசம் அடிவயறும் தலையும் நோதல் வீக்கம் துர்க்கந்த ரத்தம் வடிகின்ற விரணம் வாதாதிக்கமென்னும் 14-துர்க்குணங்கள் பிறக்கும் இதுவே விஷ உபத்திரவமாம் இக்குணங்கள் உண்டாவதற்குமுன்னமே தகுந்த சிகிச்சைகளைச் செய்யில் சாத்தியமாம் நீடிக்கில் கஷ்டசாத்தியமாம்.

## தூஷிவிஷநிதானம்.

முற்கூறிய எவ்வகை விஷமானது தானே க்ஷீணகதியானாலும் விஷஹரமான சிகிச்சையால் அதமானாலும் வெய்யில் காட்டுத்தீ காற்று முதலியவைகளினால் சோஷித்தாலும் சுபாவமாகவே சோஷித்தாலும் அவ்வுடற்குள் அழுகப்பட்டிருந்தாலும் அவ்விஷங்களுக்குத் தூஷிவிஷமெனப் பெயர் இவைகள் அற்பமாயிருந்தாலும் மனிதர்தேகத்தில் பாய்ந்தவுடனே சிகிச்சை செய்யவேயிருந்து பின்பு கபத்தைப்பற்றியேறும் இதனால் பலநிறமான மலமுண்டும் செய்யாவிடில் ஒருவருஷபரியந்தம் உடம்பினுள்ளடங்கி

வாயினால் ரத்தம்வீழ்தல் தாகம் அரோசகம் வாந்தி மயக்கம் ஈன த்தொனி சோருதலென்னும் யிக்குணங்க ளுண்டாகும் அதற்குப் பின்பு அது ரகசியஸ்தானத்தைப்பற்றி யேறும் இதனால் சிலேஷ் மவாதரோகங்கள் பிறக்கும் அதற்குப்பின் அது பக்குவாசயஸ் தானத்தைப்பற்றிக் கலக்கும் அப்போது வாதரோககுணங்களெ ல்லாம் பிறப்பதுமன்றித் தலைமயிர்கள் உதிரும் அதற்குப்பின் அது சப்ததாதுக்களையும்பற்றிப் பரவும் அப்போது அனந்தவிகா ரங்களுண்டாகும் ஆதலால் அற்பவிஷத்திற்கும் மகாவிஷசிகிச்சை களைச் செய்யவேண்டும். தூஷியென்பது அற்பமாம்.

---

## சில சாஸ்திரக் கேள்வி.

கறட்டுஒணான் தேள் நண்டுவாய்க்காலி பூரம் சிலந்தி புலிமு கப்பூச்சி செய்யான் பொறிவண்டு இவைகள் விரியனென்னும் பா ம்பினது முதுகு வெடிக்க அதன்வழியாகப் பிறக்குமென்று சில சாஸ்திரங்கள் கூறுகின்றது.

### சீதமண்டலி.

இது கடித்தால் குடல் குளிர்தலும் அரட்டலும் மிகுந்த விய ர்வைபெருகி ஒடுதலுமுண்டாகும் இதற்கு ரசகந்தமாதி உண்டை ஆகும்.

### ரத்தமண்டலி.

இது கடித்தால் மயிர்க்கால்கள்தோறும் ரத்தமொழுகும் இதற்கு யானைவணங்கியிலையைமாத்திரம் பெரிய எலுமிச்சங்காய் பிரமாணம் அறைத்து ஆழாக்கு நல்லஜலத்தில் கரைத்துக் கொடு க்கில் நலமாம்.

### பூரம்.

இது கடிக்கில் அது ஊறுவதுபோல் தினவும் அவ்வுருவத் தைப்போல் தடிப்புமுண்டாகும் இதற்கு குப்பைமேனிச்சாற்றை உள்ளுக்குக்கொடுத்து பத்தியமிருக்கவும்.

### செய்யான்.

இது கடித்தால் அவ்விடத்தில் வீக்கமும் தேளைப்போல் மறு நாள்வரைக்கும் கடுப்புமுண்டாகும் இதற்குத் தேள்விஷச்சிகிச் சை யுதவும்.

சேஞ்சேரா.

இது கடிக்கில் மேலில் சிவந்த புள்ளிகளான தடிப்புக ளுண்டாகும் இவ்விஷம் உத்தாமணியிலைரசத்தில் சுண்ணங்குழைத்துப் பூசத் தீரும்.

கருஞ்சேரா.

இது கடித்தால் தேகத்தில் கறுப்புக்கறுப்பான தடிப்புகள் உண்டாகும் இதற்கும் மேற்கூறிய சிகிச்சைகள் ஆகும்.

அருப்புள்ளிவண்டு.

இது கடித்தால் சர்வாங்கத்திலும் சிலநாட்சென்றபின்பு வட்டம்வட்டமான தடிப்புக ளுண்டாகும்.

சேவ்வட்டை.

இது கடித்தால் அவ்விடத்தில் சிவந்து தடித்து மறத்திருக்கும்.

அரணை.

இது கடித்தால் சீரமுழுதும் நடுக்கல் வாயால் நுரைவீழ்தல் நாவுதடித்தல் என்னு மிக்குணங்களுண்டாகும் இதற்கு ஓணான்விஷத்திற்குச் சொல்லிய சிகிச்சைக ளுதவும்.

சரகுண்ணி.

இது கடித்தால் வீக்கமெழும்பும் காட்டுண்ணிக்கு யிக்குணத்துடன் கடுப்பும் உண்டாயிருக்கும் இதற்குக் குப்பைமேனிரசம் ஆகும்.

எலிபேதம்.

கத்தரிமணியன் செம்மூக்கன் வரளி குறட்டை கருங்காலன் தலையன், விடவெலி, செற்றலைமுட்டி, செவ்வெலி, வீங்கெலி, தூங்கெலி, உலைப்பெலி, புடையெலி, இணைப்பெலி, செங்கண்ணன், புள்ளக்காடன், குறுக்காளன், நச்செலி ஆக 18-வகையாம்.

சில்லறாவிஷபேதம் முற்றிற்று.



இதற்கு முந்திய மூலிகைமர்மமென்னும் சாஸ்திரத்தில் ரச பாஷாணதிவர்க்கம் ஒன்றேனுமின்றி புத்தகம் முதலிலிருந்து கடைசிமட்டில் மூலிகைப்பிரயோகமே அடங்கியது மூலிகையெடுக்கும் மூலமந்திர சாபநிவர்த்தியுடன் 640-முறைகளடங்கிய நூல் விலை அணா 8-க்குக் கிடைக்கும்.



சகல விஷக்கடிகட்கும்,

# ஔஷதவகுப்பு.

சர்வவிஷத்திற்கு,

## பரஞ்சோதிக்குழம்பு.

| | |
|---|---|
| ஊமத்தன்பருப்பு | இரதம் |
| மகிழம்பருப்பு | கெந்தகம் |
| அழிஞ்சில்பருப்பு | வெண்காரம் |
| தில்லைப்பருப்பு | குக்கில் |
| வெண்குன்றிப்பருப்பு | நாவிக்கிழங்கு |
| வாளப்பருப்பு | நிருவிஷம் |
| மனோசிலை | பொன்மெழுகு |
| அரிதாரம் | பெருங்காயம் |
| கெவுரி | சுக்கு |
| வெள்ளை | மிளகு |
| இலிங்கம் | திப்பிலி |
| நவச்சாரம் | வெள்ளைப்பூண்டு |
| சீனக்காரம் | வெந்தயம் |
| நீலத்துருசு | |

இவைகள் வகையொன்றுக்கு விராகனிடை 2-ஆகச் சுத்தி செய்து எலுமிச்சம்பழச்சாற்றால் ஐந்துநாள்வரையில் கைவிடாமல் அரைத்து மேதிக் கொம்புச்சிமிளி லடைத்துக்கொண்டு பணவிடை வெற்றிலையிற் றடவிக்கொடுக்க அஷ்டநாகம் விரியன் மண்டலி, செய்யான், செவ்வட்டைக்கடி, தேள், நட்டுவாக்காலி, எலி, மூஞ்சூறு, பூனை, அரணை, முதலை, யானை, பேய்நரி, பேய்நாய்,

இவைகளின் கடிவிஷமும் மற்ற ஊர்வன விஷஜெந்துக்களின் கடிவிஷமும் நீர்வாழும் ஜீவஜெந்துக்களின் கடிவிஷங்களும் தீரும் இதற்குப் பத்தியம் ஆவின்பால் அன்னம் சாப்பிடவும்.

மகாசிந்தாமணிக்குழம்பு.

| | |
|---|---|
| இரதம் | தாரம் |
| கெந்தி | கிருவிஷம் |
| வெள்ளைப்பாஷாணம் | சன்னிநாயகம் |
| நாவிக்கிழங்கு | சுக்கு |
| இலிங்கம் | மிளகு |
| துத்தம் | கடுக்காய் |
| துருசு | வாளப்பருப்பு |

இவைகள் வகை 1-க்கு விராகனிடை 1.

| | |
|---|---|
| குப்பைமேனி | ஊமத்தை |
| தைவேளை | அவுரி |
| பேய்பீர்க்கு | வேலிப்பருத்தி |

இவைகளின் இலைச்சாறு வகை 1-க்கு அரைக்காற்படி. பேய்க்கும்மட்டிபழச்சாறு படி அரைக்கால், காஞ்சிரம்பழச்சாறு படி 1, இவைகளைவிட்டு மேற்படி சரக்குகளைத் தனித்தனியே அறைத்து ஒரு சட்டியிற்போட்டு கொஞ்சம் வேப்பெண்ணெய் விட்டு மெழுகுபதமாய்க் கிண்டி சிமிளிலடைத்துக்கொண்டு அஷ்டநாகம் முதலாயுள்ள சர்வவிஷத்திற்கும் ஒரு குன்றியிடை அல்லது அரைக்குன்றியிடை கொடுக்கத் தீரும் பத்தியம் பால் அன்னம்.

சஞ்சீவிக்குழம்பு.

| | |
|---|---|
| துருசு | அரிதாரம் |
| இரதம் | நாவிக்கிழங்கு |
| காயம் | வெள்ளைப்பாஷாணம் |
| ஜாதிலிங்கம் | கெந்தம் |
| வெண்காரம் | வேப்பம்பருப்பு |
| வாளப்பருப்பு | |

இவைகளை வெள்ளெருக்கம்பாலில் ஒருஜாமமும் வேப்பெண்ணெய்யில் ஒருஜாமமும் அறைத்து சிமிளிலடைத்துக்கொண்டு பயறளவு வெற்றிலையிற்கொடுக்க சர்வவிஷமும் விஷவேகத்தால் பற்கிட்டியிருந்தால் பணவிடை வெந்நீரில் கலக்கிப் புகட்ட நீங்கும் பத்தியம் பாலும் அன்னமும் முருங்கையிலையை உப்பில்லாமல் அவித்து மிளகுபொடி தூவிக் கொடுக்கவும்.

## சஞ்சீவகரணித் தயிலம்.

காஞ்சிரம்பழம்
பேய்க்கும்மட்டிப்பழம்
இவைவகை 1-க்கு பழம் 103
வெண்குன்றிப்பருப்பு
நீர்க்கடம்பருப்பு
நீர்வெட்டிமுத்து
இவை வகை 1-க்கு படி 2.
நேர்வாளக்கொட்டை
வேப்பங்கொட்டை
இவை வகை 1-க்கு படி 3.

கொடிவேலிவேர்
காஞ்சிரைவேர்
அமுக்குராங்கிழங்கு
கெருடக்கிழங்கு
நாவிக்கிழங்கு
முத்தினவேப்பம்பட்டை
மாவிலிங்கப்பட்டை
பெருமரத்துப்பட்டை
கருஞ்சூரைப்பட்டை
வேலிப்பருத்திவேர்
வகை 1-க்கு பலம் 20.

இதுகளையெல்லாம் யிடித்து பில்லைபில்லையாய்த்தட்டி காய வைத்து பாண்டத்திலிட்டு பூப்புடத்தைலம்வாங்கி அந்தத் தைலத்துக்குச் சமன் வேப்பெண்ணெய் கலந்து அதில் இரதம் விராகனிடை 2, பச்சைப்பாம்பு 1, மூஞ்சூறு 1, இம்மூன்றையும் கூடப்போட்டு கலசவாயை மூடி ஒருமண்டலம் எருக்குப்பையில் புதைத்தெடுத்து வெற்றிலையிலாவது வெந்நீரிலாவது யிரண்டுதுளி கொடுக்க அஷ்டநாகம் விரியன் வழலை முதலான சர்வ விஷங்களும் யிறங்கும் உயிர் அடங்கியிருந்தால் உச்சியைக் கீறி அதில் தைலத்தைத் தேய்த்து நாசி காதில்விட்டு நாவிலுந்தேய்க்க உயிர் மீளும் பத்தியம் பாலன்னம்.

## இராமாயணத் தயிலம்.

யிறங்களிஞ்சிவித்து
புங்குவித்து
தான்றிவித்து
புன்னைவித்து

கழற்சிவித்து
கார்கோலவித்து
கடுக்காய்

இவைகள் வகையொன்றுக்கு படி 1, இவைகளை வெள்ளாட்டுநீரிலும் சிறுபிள்ளைகள்நீரிலும் வகையொன்றுக்கு 20-நாள் ஊறவைத்து உலர்த்தி குழித்தைலம்வடித்து பணவிடை வெற்றிலையிற் றடவிக்கொடுத்து கடிவாயிலும் பூச அஷ்டநாகங்கள் எலி விரியன் புடையன் தேள், நண்டுவாய்க்காலி, முறுக்கரவு, அரணை முதலிய சில்லரைவிஷங்கள் தீரும் விஷக்கடியால் நேரிடும் குஷ்ட முதலிய ரோகங்கள் தீரும் பத்தியம் வெள்ளாட்டுப்பாலன்னம்.

சஞ்சீவிமை.

திருக்கள்ளியின் மேல்பொருக்கு யிரண்டுபங்கும் யினுப்பை ப்பின்னுக்கு ஒருபங்கும் ஒன்றாய்க் கலந்து ஒரு பாண்டத்தில் அடைத்து வெள்ளாட்டு ஒருக்கொட்டிக் குழித்தைலம் வடித்துக் கொள்ளவும் புதியகாஞ்சிரைவித்தையும் அதுபோல் தைலம்வடி த்துக்கொள்ளவும் இந்த யிரண்டுவகை தைலத்தையும் ஓர்நிறை யாய் ஒன்றாய்க்கலந்து ஒரு பழையசட்டியிலிட்டு காஞ்சிரைவேர் தடிபால் கைவிடாமல் மையாகும்வரையில் கடைந்து செப்புச்சி மிளிலடைத்துக்கொண்டு ஒரு குன்றுமணியிடை வெற்றிலைச்சாற் றினுலாவது வெந்நீரிலாவது கலந்துக்கொடுக்க அஷ்டநாகம் முத லாபுள்ள சகல விஷமும் தீரும் உயிர் அடக்கமாயிருந்தால் நீர்த் தாரைமூலமாய் மேற்படி மையைப் பிரயோகிக்கத் தூங்கினவன் போல் விழிப்பன்.

பரஞ்சோதிமை.

தாய் ஈசல்கள் இருபது கொண்டுவந்து பீங்கானிற்போட்டு கால்விராகனிடை வெங்காரத்தைப் பொரித்துப் பொடித்தூவி வெப்பலில்வைக்கத் தைலமாகும் அந்தத் தைலம் களஞ்சி 3.

| | |
|---|---|
| சுக்கு | சூதம் |
| பெருங்காயம் | இந்துப்பு |
| கெந்தி | வேப்பம்பருப்பு |

இவைகள் வகையொன்றுக்கு களஞ்சி 1, இதுகளை ஒன்று ய்ச்சேர்த்தரைத்து மைபதத்தில் சிமிளிலடைத்துக்கொண்டு பண விடை வெற்றிலையிற் சேர்த்துக்கொடுக்க அஷ்டநாகமுதலாயுள்ள சர்வ விஷமுந் தீரும் விஷம் சிரசிலேறி மயக்கமாய்விட்டால் எள் பிரமாணம் மேற்படி மையைக் கண்ணில் கலிக்கமும் நாசியில் நசியமுமிட மயக்கும்தெளிந்து விஷமிறங்கிப்போம் வெறிநாய் எலிக்கடிவிஷமுந் தீரும் மேற்படி வெற்றிலையில் பெண்களுக்குக் கொடுக்க மலடு நீங்கும், குஷ்டம், பதினெட்டு குன்மவலி, வயற் றுவலி நீங்கும்.

சூரன் மை.

| | |
|---|---|
| மூஞ்சூறுவயிற்றில் | கெந்தகம் |
| சூதம் | வெள்ளைப்பாஷாணம் |

இவைகள் வகையொன்றுக்கு விராகனிடை 2, பொடித்து வைத்துத் தைத்து ஒரு கலசத்திற் போட்டு அது முழுகும்படி

வேப்பெண்ணெய்விட்டு கலசவாயை மூடி சீலைமண்செய்து எரு மைத்தொழுவில் ஒருமண்டலம் புதைத்தெடுத்துக் கல்வத்திட்டு மயனமாயரைத்து சிமிளிலடைத்துக்கொண்டு நல்லரவுவிஷத்திற் கு ஒரு சுண்டைக்காய்ப்பிரமாணமும், விரியன்விஷத்திற்கு இர ண்டு சுண்டைக்காய்ப்பிரமாணமும் மற்ற சில்லரைவிஷத்திற்கு ஒரு மிளகுப்பிரமாணமும் வெற்றிலையில் தடவிக்கொடுக்கவும்.

---

## பரஞ்சோதிமாத்திரை.

| | |
|---|---|
| திப்பிலி | சூதம் |
| மிளகு | கெந்தகம் |
| இந்துப்பு | இலுப்பைப்பருப்பு |
| பெருங்காயம் | செண்பகவேர் |
| பழுபாகற்கிழங்கு | இருவாட்சிவேர் |
| கொல்லங்கோவைக் கிழங் | முருங்கைவேர் |
| நாவிக்கிழங்கு | காஞ்சிரைவேர் |
| ஆடுதீண்டாப் பாளைவேர் | வாளப்பருப்பு |

இவைகள் வகையொன்றுக்கு விராகனிடை 1, இதுகளையெ ல்லாம் பொடித்து மூன்சூறு வயிற்றுள்வைத்து தைத்து ஒரு கல சத்திற்போட்டு அதின்வாயைமூடி பூமியில்புதைத்து மண்டலஞ் சென்றெடுத்து பேய்ப்பீர்க்கிலைச்சாற்றால் அரைத்துப் பணவிடை வீதம் மாத்திரைசெய்து ஒருமாத்திரையை வெற்றிலையில்வைத் துக்கொடுக்க சர்வவிஷமுந் தீரும் விஷம் தலைகொண்டிருந்தால் ஒருமாத்திரையை வெற்றிலைச்சாற்றில் மத்தித்து கண்ணில் கலிக் கமும் நாசியில் நசியமுஞ்செய்து நீர்த்தாரையில் நாளத்தின்மூலம் பிரயோகிக்க விஷமிரங்கும்.

---

## சூடாமணிமாத்திரை.

| | |
|---|---|
| தொட்டிப்பாஷாணம் | வாலுளுவையரிசி |
| வெள்ளைப்பாஷாணம் | வாளப்பருப்பு |
| கௌரிபாஷாணம் | இந்துப்பு |
| அரிதாரம் | கார்கோலரிசி |
| சூதம் | மூசுறுமுட்டை |
| சேங்கொட்டைப் பருப்பு | வெண்காரம் |

| | |
|---|---|
| காக்கைகொல்லிவித்து | நவச்சாரம் |
| துருசு | கல்லுப்பு |
| பெருங்காயம் | வெடியுப்பு |
| விளாவரிசி | பேய்க்காளான் |
| கருநாவிக்கிழங்கு | எட்டிவித்து |
| மூஞ்சூறின்சதை | |

வகையொன்றுக்கு விராகனிடை 1, இதுகளை வெள்ளெருக்கம்பாலால் 3-நாள்வரையில் கைவிடாம லறைத்து குன்றிபோல் மாத்திரைசெய்து ஒருமாத்திரையை வெற்றிலைச்சாற்றில் கொடுக்க சகல விஷமுந் தீரும் உயிர் அடங்கியிருந்தால் உச்சியிலும் தோளிலும் தொடையிலும் கீறி மேற்படி மாத்திரையை சிறுநீரிலுரைத்து சூடுபிறக்கத் தேய்த்துவிட உயிர் திரும்பும்.

கடிவாயிற்கட்டுமாத்திரை.

| | |
|---|---|
| இரதம் | நாவிக்கிழங்கு |
| வாளப்பருப்பு | நெய்க்கொண்டான் பழம் |
| கௌரிபாஷாணம் | |

இவைகளை ஓர்நிறையாக வெடுத்து எலுமிச்சம்பழச்சாற்றால் மயனமாயாட்டி மாத்திரைசெய்துக்கொண்டு எந்த பாம்பு தீண்டினாலும் கடிவாயில்வைத்துக்கட்ட விஷத்தைக் கீழ்நோக்கி யிழுத்துக்கொள்ளும் மேற்செல்ல விடாது.

வேறு.

| | |
|---|---|
| வெண்காரம் | அரிதாரம் |
| இரதம் | பச்சைப்பாம்புகண்டம் |

இவைகளை வெற்றிலைச்சாற்று லாட்டி மாத்திரை செய்துக்கொண்டு கடிவாயில்வைத்துக்கட்ட விஷம் கீழ்நோக்கும்.

அடக்கம் யெழுப்ப அஞ்சனம்.

| | |
|---|---|
| சூதம் | துத்தம் |
| வாளப்பருப்பு | வெண்காரம் |
| அரிதாரம் | நீல்செங்கு |
| நீலத்துருசு | |

இவைகள் வகையொன்றுக்கு விராகனிடை 1, இவைகளை பேய்ப்பீர்க்கிலைச்சாற்று லறைத்து மாத்திரைகளாகச் செய்துக்கொண்டு பணவிடை வெற்றிலைச்சாற்றிலாவது பேய்ப்பீர்க்கிலைச்

சாற்றிலாவது உரைத்து விழியில் தீட்ட அஷ்டநாகமுதலாயுள்ள விஷஜெந்துக்களின் கடியா லடங்கின உயிர் மீளும்.

### கெருட அஞ்சனம்.

| | |
|---|---|
| இந்துப்பு | பெருங்காயம் |
| இரதம் | அரிதாரம் |

இவைகளை ஓர்நிறையாயெடுத்து பேய்ப்பீர்க்கிலைச்சாற்றாலாட்டி மாத்திரைசெய்து பணவிடை வெற்றிலைச்சாற்றில் மத்தித்துக் கண்ணிலிட அஷ்டநாகமுதலாயுள்ள சர்வவிஷமுந் தீரும்.

### அடக்கம் யெழும் ஆக்கிராணம்.

தாம்பூலப்பூச்சி இரதம் துருசு வகைபொன்றுக்கு விராகனிடை 1, இவைகளை ஒன்றாய்ப்பொடித்து சுந்தரிவயிற்றுக்குள்வைத்துத் தைத்து புகையடிக்கிறயிடத்தில் கட்டிவைத்து காய்ந்தபின் பொடித்து அதை நாசியிலூத சகல அரவுவிஷமுமிறங்கும்.

### வேறு.

காற்பலம் இஞ்சியை மேற்றோலைப்போக்கி அது மூழ்கும்படி வெள்ளருக்குப்பால்விட்டு நிழலிலுலர்த்தி,

துருசு மஞ்சள் வகைக்குப் பலம் அரைக்கால் கூட்டிப்பொடித்து பேய்ச்சுரைக்குடுக்கையில் அடைத்துக்கொண்டு நாசியில் ஊத சகல விஷமும் அடக்கமுந் தீரும்.

### சகல விஷத்திற்கும்

## அகோரருத்திராஞ்சனம்.

கேளிரவம் பேய்ப்பீர்க்கன் சாற்றில்தோய்த்து
  கெடியான வாளமொடு துத்தந்தாரம்
நீளவே வெண்காரந் தன்னைவாங்கி
  நேராக யிவையைந்தும் சமனாய்க்கூட்டி
மாளவே பேய்ப்பீர்க்கன் சாற்றாலாட்டி
  வழித்துருட்டிக் காயவைத்து யெடுத்துக்கொண்டு
பாழ்விடங்கள் தீண்டிமண்டைக் கொண்டால்கண்ணில்
  பதித்துவிடு பொரிபட்ட பஞ்சாந்தானே.

### இதற்கு வியரம்.

பேய்ப்பீர்க்கன்சாற்றைக் கொதிக்கவைத்து அதில் இரசத்தைச் சாய்க்கவும் இப்படி மூன்றுவிசை மேற்படி சாற்றில் சுத்தியான,

| | |
|---|---|
| இரசம் | அரிதாரம் |
| வாளம் | வெண்காரம் |
| துத்தம் | ஆக 5. |

இவை ஐந்துசரக்கும் சமனிடையெடுத்து கலுவத்திலிட்டுப் பேய்ப்பீர்க்கன்சாற்று லறைத்து மாத்திரைகள்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு விஷம் தீண்டியவர்களுக்கு உமிநீர் அல்லது முலைப்பால் அல்லது கையாந்தகரைச் சாற்றால் யிழைத்துக் கண்ணில்தீட்டினால் விஷமீளும்.

சகல விஷத்திற்கும்

## கண் கலிக்கம்.

தானென்ற யிந்துப்பு யிரதங்காயம்
 தகட்டுஅரி தாரமிவை சமனாய்க்கூட்டி
ஏனென்று சொல்லாமல் பேய்ப்பீர்க்கன்சாற்றால்
 யிருகவறைத் தண்டைசெய்து யெடுத்துக்கொண்டு
நானென்ற கண்ணிலிட்டு உமிழ்நீராலே
 நாகமது நாலுப்பல் நாட்டினாலும்
வானென்ற அண்டமதில் பரிதிகண்ட
 வாடையெனும் பனிபோலே வாங்கும்பாரே.

இதற்கு விபரம்.

| | |
|---|---|
| இந்துப்பு | தகட்டு அரிதாரம் |
| இரதம் | காயம் |

இவை நான்குசரக்கும் சமனிடையெடுத்து பேய்ப்பீர்க்கன் சமூலச் சாற்றினால் இரண்டுநாளரைத்து கலுவத்துடன் காற்றாறியபிறகு மாத்திரைகள்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு உமிழ்நீரா லிழைத்துக் கண்ணில் தீட்டினால் நாகத்தின் நான்கு பற்கள் பட்டபோதிலும் அவ்விஷமானது சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கிவிடும்.

சகல விஷத்திற்கும்

## சித்தாந்தப்பீரிசமாத்திரை.

பாரடா சித்தாந்த பீரிசவுண்டை
 பாடுகிறேன் மகிழ்வித்து தேவதாளி
நேரடா பேய்ப்பீர்க்கு வித்தும்சூதம்
 நேர்வாள மிவையைந்தும் சமனாய்க்கூட்டி
ஏரடா சம்பீரச் சாறுவிட்டு
 எட்டுநாள் ஊறவைத்து எட்டொன்றுநாள்
சீரடா பயறுபோ லறைத்துருட்டி
 திறமாக நிழலுலர்த்தி வைத்துக்கொள்ளே.

வைத்துக்கொள் விஷந்தீண்டி சீவன்போனால்
 வாகான கையான்சா றொருக்கன்சாற்றால்
வெற்றியா பொருகுளிகை யுரைத்துக்காதில்
 விட்டடைக்க மறுசெவியில் காந்தல்காணும்

மெத்தவே காணுட்டால் அமுரிதன்னில்
விரைந்திழைத்து ஒருகுளிகை விழியிற்போட
முத்தியாய் புதுச்சீலை நனைத்துமூடில்
மூன்றேகால் நாழிகையில் முழிப்பான்காணே.

இதற்குவிபரம்.

| | |
|---|---|
| மகிழ்வித்து | இரசம் |
| தேவதாளிவித்து | வாளம் |
| பேய்ப்பீர்க்கன்வித்து | ஆக 5. |

இவை ஐந்துசரக்கும் சமனிடையெடுத்து எலுமிச்சம்பழச் சாறு மிதக்கவிட்டு எட்டுநாள் ஊறவைக்கவேண்டும் சாறு சுவரிப்போனல் மறுபடியும் விடவும் ஒன்பதாநாளெடுத்து மைபோல் அரைத்து சிறுபயறுபோல் மாத்திரைகள்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும் விஷம் தீண்டினபேர்களுக்கு கையாந்தகரைச்சாற்றில் அல்லது எருக்கன்சாற்றிலாவது யிழைத்து காதில் விட்டால் மற்றொருகாதில் அனல் வீசும் அப்படி அனல் எழும்பாவிட்டால் சிறுநீர்விட்டு ஒரு குளிகையை யிழைத்து கண்ணில் கலிக்கம்திட்டினல் மூன்றேமுக்கால் நாழிகையில் விழித்தெழுந்திருப்பான்.

சுடுகாடுமீட்டான் குளிகை.

காணப்பா காலன்கடி யெங்கேபோச்சு
காசினியில் விஷந்தீண்டி சாவாரில்லை
வீணொன்று யெண்ணுதே வேகம்மெத்த
விருதுகட்டிக் கார்ப்பேனென்று விருதுபோடு
ஊணப்பா யிக்குளிகை சூட்சமாகும்
வுறுதியிலே சுடுகாடு மீட்கலாகும்
நாணப்பா நாவிரசங் காயங்கோஷ்டம்
நல்வாளப் பருப்பழிஞ்சி பருப்பும்பேயே.

பேய்ப்பீர்க்கன் வித்துகாஞ் சிரையின்வித்து
பேர்சமனுய்த் தேசிச்சார் மிதக்கவிட்டு
ஓயாம லொருஜாமம் அரைத்துருட்டி
உண்டைசெய்து நிழலுலர்த்தி வைத்துக்கொண்டு
தீயான காலவிஷந் தலைமேற்கொண்டால்
சிறுநீரி லுரைத்திடுவாய் கண்ணிலேதான்
ஓயாத விஷமதுதா னுன்பேர்சொன்னல்
ஒழிந்தோடுங்கிப் போச்சுதடா வுண்மைதானே.

இதற்கு விபரம்.

| | |
|---|---|
| நாபி | வாளம் |
| இரசம் | அழிஞ்சிவித்து |
| காயம் | பேய்ப்பீர்க்கன்வித்து |
| கோஷ்டம் | எட்டிவித்து |

இவை 8-தினுசும் சமனிடையெடுத்து எலுமிச்சம்பழச்சார் மிதக்கவிட்டு ஒருஜாமம் கைவிடாம லறைத்து பயறுப்பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்திவைத்துக்கொண்டு விஷம் தீண்டிய பேர்களுக்கு ஒருமாத்திரை யெடுத்து சிறுநீரி லுரைத்து கண்ணில்தீட்டினால் விஷம் மீண்டு விழித்தெழுந்திருப்பான்.

சகல விஷத்திற்கும்

## மகாபரஞ்சோதி மை.

போச்சுநிந்தப் பரஞ்சோதி மையைக்கேளு
புகழான மகிழ்வித்து அழிஞ்சிவித்து
வாய்சிந்த வெண்குன்றி பருப்புவாளம்
வகையுள்ளி குக்கிலுடன் கெவுரிதாரம்
நீச்சிந்த நவச்சாரந் திரிகடுகுநாவி
நிருவிஷவெண் காரமனோ சிலையும்லிங்கம்
ஆச்சிந்த பொன்மெழுகு தில்லைவித்து
அழகான சீன்முடன் தாருசுவாங்கே.

வாங்கியே வகைவகைக்குக் கழஞ்சிவீதம்
வளமான செந்திரச மொவ்வொன்றுக்கும்
ஓங்கியே எலுமிச்சம் பழச்சார்தன்னை
யுறுதியாய் விட்டறைப்பா யைந்துநாள்தான்
பாங்கான ரவியில்வைத் தெடுத்துக்கொண்டு
பண்பாக வாய்குவிந்த பீங்கான்தன்னில்
தாங்கியே வைத்தடைத்து நித்தநித்தந்
தயவாகப் பணவிடைவெற் றிலையிலீயே.

ஈந்திடவே குஷ்டவகை பதினெட்டும்போம்
யெரிவிரியன் வகையாறு நாகமெட்டும்
காய்ந்திடுமண் டலிநாலுங் கடுவிடங்கள்பூரான்
கதறுமடா செவ்வட்டை முதலோமூஷி
ஆய்ந்தவனை விற்புருதி யாறுமோடும்
அப்பனே ஜன்னிபதின் மூன்றுமோடும்
சேர்ந்தபிணி தீயிலிட்ட மெழுகாய்ப்போகும்
திறமான பரஞ்சோதி திடமாங்காணே.

திடமான மையிதுதான் தேசமெல்லாம்
ஜெயஸ்தம்பம் நாட்டிவைக்கும் விருதுபோடு
விடமீட்க வல்லவனைக் கெதிரியில்லை
வீணாக வுலகுதனில் மைதான்மெத்த
படிகுள்ளே யிம்முறைபோ லெதுவுமில்லை
பார்ப்பதற்கு யிதுசுளுகு பரிட்சைமெத்த
நொடிக்குமுன்னே நேய்விஷங்க ளோடிப்போகும்
நூற்றாண்டுக் காலமட்டும் கீர்த்தியாமே.

## இதற்கு விபரம்.

| | |
|---|---|
| மகிழம்வித்து | நவாச்சாரம் |
| அழிஞ்சிவித்து | சுக்கு |
| வெண்குன்றிப்பருப்பு | திப்பிலி |
| வாளப்பருப்பு | மிளகு |
| காயம் | நாவி |
| மைசாட்சி | நிருவிஷம் |
| கௌரிபாஷாணம் | வெண்காரம் |
| அரிதாரம் | மனோசிலை |
| பொன்மெழுகு | லிங்கம் |
| கெந்தி | இரசம் |

இந்த 20-வகையும் சமனிடையெடுத்து எலுமிச்சம்பழச்சாறுவிட்டு இரண்டுநாள் ஊறவைத்து அதன்பிறகு ஐந்துநாள்வரையிலும் கைவிடாமலரைத்து ஒருஜாமம் சூரியகாந்தியில்வைத்தெடுத்துக்கொண்டு வாய்சிறுத்த பீங்கான்கோப்பையில் வைத்து பதனம்பண்ணி பிரதிதினமும் பணவிடையெடுத்து வெற்றிலையில் மடித்துக்கொடுக்க குஷ்டம் 18-வகையும் ஆறுவகை விரியன் விஷமும் எட்டுவகை சர்ப்பவிஷமும் மண்டலி பூரான் செவ்வட்டை முதலை அரணை எலி முதலான விஷங்களும் விப்புருதி ஜன்னி பதின்மூன்று இதுகளியாவும் தீரும் வியாதியும் விஷநிதானமும் பார்த்து 5-நாள் அல்லது 7, 10-நாள்வீதம் கொடுக்கவும் பத்தியம் காலபுளிப்பு கூட்டவும்.

---

## நாள்பட்ட விஷத்திற்கு

## உண்டை.

கீர்த்தியாம் வெள்ளெருக்கன் சிறியாநங்கை
கெடிவெள்ளைக் காக்கணம்வே ரிவைகள்மூன்றும்
பார்த்திபனே வகைக்குப்பாக் களவரைத்து
பரிவாக தேசிக்கா யளவுவெல்லம்
நாற்றிசையு மெய்த்திடவே மைந்தாகொள்ளு
நற்குருவை பரிசித்தோ றுண்ணச்சொல்லு
மூர்த்திகட்கும் நாட்சென்ற விஷங்கள்போச்சு
மூன்றுநாள் ராப்பகல்பத் தியமதாமே.

இதற்கு விபரம்.

வெள்ளெருக்கன்வேர், சிறியாநங்கைவேர், வெள்ளை காக்கணம்வேர் இம்மூன்றும் வகைக்குப் பாக்களவெடுத்து அரைத்து சுண்டைக்காயளவு நல்லவெல்லத்துடன்மத்தித்து ஆறுபங்காக்கி காலை மாலை யிருவேளையும் மூன்றுநாள் கொடுக்கவும் குருவையரிசிச்சாதம் புளிபற்ற மிளகுநீர் கூட்டவும் மூன்றுநாள் இராப்பகலும் இப்படியே பத்தியமிருக்கவும் நாட்பட்டு உடம்பில் ஊறிய விஷம் தீரும்.

விரியன் கடித்த புண்ணுக்கு

## மருந்து.

பத்தியமாம் பாவட்டயிலை வேகவைத்து
பண்பான வெந்நீரால் கழுவிப்போட்டு
வெற்றியா மவ்விலையை வைத்துக்கட்ட
விரியனது கடிவீங்கி வெடித்தபுண்கள்
சுத்தமா யாறிவிடும் சொன்னேன்சொன்னேன்
சூராதி சூரனென்ற ஔஷதங்கேள்
நித்தியமும் ராச்சொல்லான் பலமேவாங்கி
நெடியபேய்ச் சுரையருகில் நின்றுபாரே.

இதற்கு விபரம்.

விரியன் கடித்து வீங்கி வெடித்த புண்ணுக்குப் பாவட்டையிலைபோட்டு தண்ணீர்காய்ச்சி அந்த ரிணத்தைக் கழுவிவிட்டு ஈரமில்லாமற்படிக்கு துணியினால் ஒத்திடம்செய்து மேற்படியிலையை வதக்கிவைத்துக் கட்டவும் இப்படி 5, 6-வேளை கட்ட விரியன் கடித்த புண் ஆறிவிடும் குருவையரிசிச்சோறும் மிளகுநீரும் கூட்டவும்.

சகல விஷத்திற்கும்

## சூராதிசூரன்.

பாரேநீ தொடிகளொன்றும் அறுகிலேதான்
பருதிநாள் காய்குடைந்து ராச்சொல்லானை
சேரவே வைத்தடைத்து சதையால்மூடு
செழுச்செத்து வுலருமட்டும் போட்டுப்பாரு
வாரமுந்தி லேயெடுத்து வைத்துக்கொண்டு
விரும்புள்ளி விரையளவு அரைத்துநீரில்
ஊறவே நாக்கிலிட்டு வுள்ளுக்கீவாய்
ஓடுமே விஷமொழிந்து வுடலைவிட்டே.

## இதற்கு விபரம்.

இராச்சொல்லான் என்னும் கரியுப்பு ஒருபலமெடுத்து பேய்ப்பீர்க்கன்செடியினிடம் ஆதிவாரம்சென்று அதின் காயை மேல்சதரத்தில் வட்டமாகக் கீறியெடுத்து உள்சதையை யெடுத்துவிட்டு மேற்படி உப்பைக்கொட்டி மேல்பில்லேமூடி கயிற்றால் கட்டி வைக்கவும் நான்குநாட்பொறுத்து அதேகாயில் மறுபடியும் ஒரு பலம் உப்புபோட்டு முன்படியே கட்டிவைக்கவும் அந்தச் செடியானது வேர்நசித்து உலருமட்டும் காயை அறுக்காமலிருந்து மேற்படி செடி செத்து உலர்ந்துபோனபிறகு ஆதிவாரம்பார்த்து அந்தக் காயை அறுத்து வசம்பு உள்ளி கொஞ்சம்கூட்டி நீர்விட்டறைத்து பீர்க்கன்விரையளவு நாக்கில்போட்டு ஊறியபின் மொச்சையளவு உள்ளுக்குக் கொடுக்கவும் சகல விஷங்களுந் தீரும் இப்படி விஷம் தீருமளவும் சிலநாள் கொடுக்கவும் முன்போலவே பத்தியமிருக்கவும்.

இது அறவு கடித்தவுடன் கொடுக்கப்பட்ட ஔஷதமன்று நாட்பட்ட விஷங்கட்கு செய்யவேண்டிய சிகிச்சையாம்.



### சகல விஷத்திற்கும்

## நஞ்சிற்பாய்ந்தான்மாத்திரை.

வரி[illegible]சயித சொல்லுகிறேன் நாவிசூதம்
வளமான துருசிதுத்தம் வாளந்தாரம்
தரியாத சிலேகுன்றி பருப்புவெள்ளைச்
சாரணைவேர் மகிழ்வித்து பச்சைப்பாம்பின்
சிரங்கூட்டிச் சரிசமனாய் சம்பீரச்சார்
தெளிவாக விட்டறைநீ கல்வத்திட்டு
உரித்தான வெண்காரங் கூடப்போட்டு
வுகந்துதிரி நாளறைத்து வுண்டைபண்ணே.

பண்ணியே நிழலுலர்த்தி வைத்துக்கொண்டு
பாரவிடந் தீண்டிமிக தலைமேற்கொண்டால்
திண்ணமா யுச்சியிலும் நுதலிலேயும்
திடமான பிடரியிலுங் கன்னத்தேயும்
நன்றாகக் கீறிவைத்துக் கட்டும்போது
நாகவிட முதற்கொண்டு நசிஞ்சிப்போகும்
புண்ணியமா மலைக்காத்தான் குளிகைகேளு
புதியதுத்தந் துருசிலை காயந்தானே.

## இதற்கு விபரம்.

| | |
|---|---|
| நாவி | துருசு |
| இரசம் | துத்தம் |
| வாளம் | சாரணைவேர் |
| அரிதாரம் | மகிழம்வித்து |
| மனோசிலை | வெண்காரம் |
| வெள்ளைக்குண்டுமணிபருப்பு | பச்சைப்பாம்புதலை |

இவையாவும் சமனிடையாய் நிறுத்தெடுத்து மூன்றுநாள்வரையிலும் அரைத்தபிறகு நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு விஷம் தீண்டி தலைக்கேறி சுவாசமில்லாதவர்களுக்கு உச்சியிலும் நெற்றியிலும் பிடரியிலும் கன்னத்திலும் கத்தியாற்கீறி இம்மருந்தைவைத்துக் கட்டினால் உடனே விஷம் நசித்து உயிர்மீண்டு எழுந்திருப்பான்.

---

## மலைக்காத்தான் குளிகை.

தானென்ற வாளமரி தாரங்கெந்தி
ஜாதிலிங்கம் நாவிவெள்ளை கெவுரிசூதம்
ஏனென்ற தொட்டியொடு யெலிபாஷாணம்
பெரிமிளகு குதிரைப்பல் பாஷாணந்தான்
வானென்ற திப்பிலியோ டிவைகளெல்லாம்
வளமாகச் சமன்கூட்டி மேனிச்சாறு
நீங்கினவாய் விட்டறைத்து வுண்டைபண்ணி
நிழலுலர்த்தி மிளகுப்பொடி தன்னில்சேர்த்தே.

## இதற்கு விபரம்.

| | |
|---|---|
| துத்தம் | கெந்தி |
| துருசு | ரசம் |
| காயம் | லிங்கம் |
| மனோசிலை | குதிரைப்பல்பாஷாணம் |
| நாவி | தொட்டிப்பாஷாணம் |
| கெவுரிபாஷாணம் | எலிப்பாஷாணம் |
| வாளம் | திப்பிலி |
| அரிதாரம் | மிளகு |

இவை சமனிடையெடுத்துப் பொடிசெய்து குப்பைமேனிச்சார்விட்டறைத்து உண்டைசெய்து நிழலிலுலர்த்திவைத்துக்கொண்டு விஷம்தீண்டி வந்தவர்களுக்கு நஞ்சிற்பாய்ந்தான் மாத்திரைபோல் இதையும் உபயோகித்தால் விஷமொழிந்து உயிர்மீண்டு எழுந்திருப்பான்.

## சகலவிஷத்துக்கும் நசியம்.

| | |
|---|---|
| முருக்கிலை | மிளகு |
| தும்பை | வெற்றிலை |
| எருக்கிலைப்பழுப்பு | நவாச்சாரம் |

இவைகளைத் தட்டி நாசி காதில் நசியமிட சகல விஷமும் நீங்கும்.

### வேறு.

| | |
|---|---|
| தும்பையிலை | வசம்பு |
| அவுரியிலை | உள்ளி |
| பெருங்காயம் | மிளகு |

சிறுபிள்ளைகளின் அமுரிவிட்டுத் தட்டி காது நாசியில் விட்டால் கிழ்நோக்கும்.

### வேறு.

| | |
|---|---|
| தைவேளையிலை | சுக்கு |
| வேலிப்பருத்தியிலை | மிளகு |
| வெற்றிலை | வசம்பு |
| கரியுப்பு | வெள்ளுள்ளி |

இவைகளை ஓர்நிறையாயெடுத்து சிறுநீர்விட்டுத் தட்டி நாசியில் நசியமிட அடங்கின வுயிர் திரும்பும்.

## விரியன்பாம்புகளின் கடிக்குறியும் அவைகளுக்குச் சிகிச்சையும்.

மேற்படி விரியன் வகைகள் ஆறும். அவற்றில் குருவிரியன் கடித்தால் செந்நிறமாயும் பொன்னிறமாயும் நீர்வடியும் கடிவாயிற் றசைத்துள்ளி வீங்கும் கடுக்கும் உடல் வெதுப்பும்.

நாட்பட்ட வரகரிசியும் பிராய்மரப்பட்டையு மிடித்து மாவு செய்து வெள்ளாட்டுப்பாலில் சமைத்து மூன்றுநாள் தின்று மறு பத்தியம் மூன்றுநாளிருக்கத் தீரும் உப்பு புளி தள்ளவும்.

## செவ்விரியன்கடி.

செவ்விரியன் கருவிரியன் பசுமைநிறவிரியன் இவை கடித்தால் கடிவாயில் உதிரம் வடியும் வீக்கம் கடுப்பு இரத்தவார்த்தியுண்டாகும்.

செவ்விரியன் கடித்தவுடன் ஒடுவைவேரை அறைத்துக்கொடுக்கத் தீரும் வன்னியிலையை தேசிக்காய்ப்பிரமாணம் அறைத்து ஆவின் வெண்ணெயில் மத்தித்து உள்ளுக்குக்கொடுத்து கடிவாயிலும்பூசத் தீரும்.

வெள்வேலம்பட்டையை ஆவின்மோரி லரைத்துக் கலக்கிக் கொடுக்கத் தீரும்.

### கருவிரியன் கடி.

கருவிரியன் கடித்தாலும் பசுமைகிறவிரியன் கடித்தாலும் அரைக்காற்படி மிதிபாகலிலைச்சாற்றில் காற்பலம் மிளகைப் பொடித்துப்போட்டுக் கொடுக்க மேற்படி விரியன்களின் விஷமும் மற்ற விரியன்களின் விஷமுந் தீரும்.

### பெருவிரியன் கடி.

பெருவிரியன் கடித்தால் பேய்க்குமட்டிவேர் அவுரிவேர் தலைச்சுருளிவேர் மிளகு சமனுயிடித்துப் பேய்ச்சுரைக்குடுக்கையில் அடைத்துக்கொண்டு திரிகடிப்பிரமாணம் சிறுபிள்ளைகளின் நீரில் கலக்கிக்கொடுத்து கடிவாயிலும் பூசத் தீரும் இம்பூரல் கீழ்காய் நெல்லி கோழிக்கால் மிளகு மஞ்சள் இவைகளை ஓர்நிறையாய்ச் சிதைத்து நல்லெண்ணெயிற் காய்ச்சி கடிவாய்ப்புண்ணிற் போட்டு ஆத்திஇலையை வெதுப்பிப் பொடித்துத் தூவிவரப் புண்கள் ஆறிவிடும்.

### கத்திரிவிரியன் கடி.

கத்திரிவிரியன் கடித்தால் உதிரம் வடியும் அதில் வீக்கம் கடுப்பு எரிச்சல் மயக்கங்காணும் உடல் வெதும்பும்.

### புல்விரியன் கடி.

புல்விரியன் கடித்தால் கடிவாயில் விலச்சுண்டுவதுபோல் சுண்டி வலித்து வீங்கும் உடற்கணுக்கள் வீங்கும் தூக்கம்போல் மயக்கங்காணும்.

### சுழற்றுக்கோல்விரியன்கடி.

சுழற்றுக்கோல்விரியன் கடித்தால் தலை சுழலும் உடலுளையும் காந்தும் நடுங்கும் செவி மந்திக்கும் கண் பஞ்சடையும் மேற்சொல்லிய எவ்வகை விரியன் கடித்தாலும் உடனே ஒரு குன்றுமணிப்பிரமாணம் துருசைப் பத்து வெற்றிலையில்வைத்து மடித்துத் தின்னக்கொடுக்க மேற்படி விஷங்களிறங்கும் கடிவாய் வீங்காது கடுப்பு எரிவு உடனே தீரும்.

அவுரிவேரை யறைத்து ஆவின்பாலில் கொடுக்க சகல விரியன்களின் விஷமுந் தீரும்.

சன்னிநாயகம் சமூலம் யிடித்துச் சாறுவாங்கி அரைக்காற்படி உள்ளுக்குக்கொடுத்து மேற்படியிலையை அறைத்து உடல்முழுக்கப் பூசிவிட சகல விரியன்களின் விஷமுந் தீரும் கிரந்திநாயகத்தையும் இப்படியேசெய்யத் தீரும்.

குட்டித்தக்காளியிலை பெருந்தக்காளியிலை இவ்விரண்டையும் இடித்து அரைக்காற்படிச் சாறுவாங்கி உள்ளுக்குக் கொடுத்து மேலிலும் துவாலையிட மேற்படி விஷங்கள் தீரும்.

கடிவாயிற் பூசும் மருந்து.

தலைமயிரைக் கருக்கி ஆவின் வெண்ணெயில் மத்தித்துக் கடிவாய் வீக்கத்திற் பூச வற்றும்.

பாவட்டையிலையை அவித்து அந்தத் தண்ணீரால் புண்ணைக் கழுவி வெற்றிலையை வைத்துக் கட்டிவரத் தீரும்.

அம்மான்பச்சரிசியிலையை யறைத்துப் பூசிவர வீக்கம் கடுப்பு எரிவும் தீரும்.

தக்காளிவேர், நாயுருவிவேர் இவைகளைச் சிறுநீர்விட்டறைத்துக் கடிவாயிற் பூசிவர வீக்கம் வற்றும் உடம்பிற் பூசி முறுக்க மயக்கந் தீரும்.

கோழிச்சதையையாவது அதின்கொழுப்பையாவது மூன்று நாள் வைத்துக்கட்டி அப்பாற் காடியிற்கழுவி இதனடியிற் கண்டிருக்கிற எண்ணெயைப் போடவும்.

சகல விரியன் விஷகடிக்கும், வீக்கத்திற்கும்,
புண்ணுக்கும் போடத் தயிலம்.

| | |
|---|---|
| இரண்டு கோழுக்கால் | மஞ்சள் |
| இம்பூரல் | மிளகு |
| கீழ்காய்நெல்லி | இந்துப்பு |

இவைகளைச் சிதைத்து நல்லெண்ணெயிற் காய்ச்சி புண்ணிற் போடத் தீரும்.

| | |
|---|---|
| மூஞ்சூறு | சுக்கு |
| வசம்பு | உள்ளி |

இவைகளைச் சிதைத்து நல்லெண்ணெயில் காய்ச்சி புண்ணிற் போட சகல விரியன்களின் கடிவிஷமும் புண்ணும் ஆறும்.

கருவழலைமுதலிய மற்ற சில்லறைப் பாம்பு
களின் கடிவிஷக்குறியும், அவைகட்குச்
சிகிச்சையும்.

உடல் தீப்போற் காந்தும் வியர்க்கும் உள்ளங்கால் கை சிவக்கும் கண்மங்கும் நெஞ்சடைக்கும் கோழைகட்டும் பல்வலிக்கும்.

மற்றவகை வழலை கடித்தால் உடலில் பசுமை நரம்புதோன்றும் வியர்க்கும் வாயில் நீர் வடியும் கடிவாயில் உதிரம் வடியும் வாய் வழுவழுக்கும்.

## கருவழலைக்கடி.

வேலிப்பருத்திவேர்
அதின் இலை
வெள்ளைச்சாரணைவேர்
அதின் இலை
நீலிவேர்
பெருங்காயம்

இவைகளை ஓர்நிறையா யறைத்துத் தேசிக்காய்ப்பிரமாணம் உள்ளுக்குக்கொடுத்து கடிவாயிலும் பூசத் தீரும்.

## மற்ற வழலைகள் கடித்தால்.

நற்சூரியிலை, வசம்பு, உள்ளி இவைகளை அரைத்து கடிவாயிற் பூசி உடம்பிற்றேய்த்து முறுக்கவும்.

சிற்றாமணக்கின்வேர்
குன்றிமணிவேர்
பழம்புளி
நிலப்பனைக்கிழங்கு.

இவைகளை ஓர் நிறையாய் அரைத்து சிறுநீரிற்கலக்கிக்கொடுக்கத் தீரும்.

உப்பிலிவேர், நிலப்பனைக்கிழங்கு இவ்விரண்டையும் ஓர் தேசிக்காய்ப்பிரமாண மறைத்து சிறுநீரிலாவது ஆவின் வெண்ணெயிலாவது கொடுக்கத் தீரும்.

## மயக்கரவு கடி.

மயக்கரவு கடித்தால் இருவிழியும் சுழலும் அடிக்கடி மயக்கங் காணும் முகம் கருக்கும் பரபரப்பாய் விஷமேறி மார்பை அடைக்கும் கைகால் நரம்புகள் விரைக்கும்.

கரிப்பாலையிலையை அரைத்து ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் மூன்றுநாள்கொடுத்து மிளகுபுகையை நாசியிலும் முகத்திலும்காட்டத் தீரும்.

## முருக்கரவுகடி.

முருக்கரவு கடித்தால் உடலைத் திரிகி முறுக்கும் அங்கம் பதரும், இதற்கு பெருங்காயம், சிறுசின்னியிலை, வசம்பு இவைகளை ஓர்நிறையா யறைத்துத் தேசிக்காய்ப்பிரமாணம் கொடுத்து அதை உடம்பிற்பூசி முறுக்கி நாசியில் நசியமிடத் தீரும்.

அரைக்காற்படி மிதிபாகற்சாற்றில் காற்பலமிளகைப் பொடித்துப்போட்டுக் கொடுத்தாலும் ஒரு தேசிக்காய்ப்பிரமாணம் நிலப்பனைக்கிழங்கை அரைத்து வெந்நீரிற் கொடுத்தாலும் தீரும்.

## கூளைப்பாம்புகடி.

கூளைப்பாம்பு கடித்தால் சிலகாலத்துக்குப்பின் குஷ்டம் போற் றேகத்திலுண்டாகி கால்கை விரல்கள் குறையும் இது கருமையும் வெண்மையும் கலந்த புள்ளியுள்ளதாயிருக்கும்.

இதற்கு உசிலம்பட்டையை ஆவின்பால்விட் டிடித்துப் பிழிந்து அரைக்காற்படிவீதம் ஏழுநாள் கொடுத்து உப்பு புளி தள்ளி பத்தியமாயிருக்க மேற்படி விஷம் தீரும்.

## செஞ்சோர்வுகடி.

செஞ்சோர்வு கடித்தால் உடலெங்கும் புள்ளிபோற்றடித்து சிவந்தநிறமாயிருக்கும்.

இதற்கு எருக்கம்பால் ஏழுசொட்டு பனைவெல்லத்தில் கொடுக்கவும் இந்தப்படி மூன்றுதடவை ஒன்றைவிட்டொருநாள் கொடுக்கத் தீரும்.

## கருஞ்சோரா கடி.

கருஞ்சோர்வு கடித்தால் தேகமுழுதும் கருத்துத் தடித்துத் திமிராயிருக்கும்.

இதற்கு நன்னாரிவேர் சிரியாநங்கைவேர் இவ்விரண்டையும் சமனாய் ஒரு தேசிக்காய்ப்பிரமாணம் அரைத்து ஆவின்பாலில் கொடுக்கத் தீரும்.

## புடையான் விஷம்.

புடையான் பாம்பானது அதின் வாலின் முனையால் மனிதர் முதலிய ஜீவஜெந்துக்களைக் குத்தும் அந்த விஷம் தேகத்திற் சில நாள் தங்கியிருந்து அப்பாற் றேகமெங்கும் படைகளுண்டாய்ப் பொத்துச் சீழ்வடியும்.

அதற்கு ஒருபிடி புத்தான்சோற்றைக் காற்படி நல்லெண்ணெயிற்போட்டுக் காய்ச்சி கொஞ்சம் உள்ளுக்குக்கொடுத்து கடிவாயிலும் பூசத் தீரும்.

பிராயம்பட்டையும் நாட்பட்ட வரகரிசியுமிடித்து மாவுசெய்து களிகிண்டி மூன்றுநாள் சாப்பிட்டு மறுபத்தியம் மூன்றுநாளிருக்கத் தீரும்.

## நெடுங்கழுத்துப்புடையன்விஷம்.

நெடுங்கழுத்துப் புடையன் விஷத்துக்கு கொல்லன்கோவைக்கிழங்கைப் பாலில் அரைத்துக்கொடுக்கத் தீரும்.

புகையூரல் அவுரியிலை இலுப்பையரைப்பு இவைகளைக் கொடிக்கள்ளிப்பால்விட்டு அரைத்துப் பூச புடையன் குத்தும் வீக்கமும் தீரும்.

## தட்டைப்புடையன் விஷம்.

தட்டைப்புடையன் விஷத்திற்குப் பத்து வெள்ளெருக்கம் பூவை வெற்றிலையில் சுருட்டி தின்னக்கொடுத்து வசம்பை நெருப்பிலிட்டு அந்தப் புகையை நாசியிலேற்றத் தீரும்.

## வரிப்புடையன் விஷம்.

வரிப்புடையன் விஷத்திற்கு புத்தான்சோறும் வசம்பும் எருக்கம்பால்விட்டுத் தட்டி நாசியில் நசியமிடத் தீரும்.

ஊதுபுடையன்விஷம்.

ஊதுபுடையன் விஷத்தால் கடிவாய் வீங்கி விஷமேறும் கை கால் உளையும் உடல் வீங்கும் கண்ணில் நீர்வடியும் மயக்கமுண்டாகும் வீழிப்பூவை ஒரு தேசிக்காய்ப்பிரமாணம் அறைத்துக்கொடுக்கச் சகல புடையன்விஷங்களுந் தீரும்.

| | |
|---|---|
| காட்டுக்கருணைக்கிழங்கு | புகையூரல் |
| கொட்டாங்கரந்தை | இலுப்பைப்பிண்ணாக்கு |

இவைகளைச் சிறுநீர்விட் டறைத்து புடையன் குத்தும் வீக்கத்திற்பூசத் தீரும்.

இரத்தமண்டலிகடி.

இரத்தமண்டலி கடித்தால் கடிவாயிலும் மயிர்க்காலிலும் இரத்தம் தாரைதாரையாய் வடியும்.

அதற்கு சிறுசெப்படைபையாவது கொல்லங்கோவையிலையையாவது பிடித்துச் சாறுவாங்கி அரைக்காற்படி மூன்றுநாள் காலையில்கொடுத்து உடம்பிலும் அந்தச் சாற்றைப்பூசத் தீரும்.

வெள்வேலம்பட்டைபைக் காடியாவது ஆவின்மோராவது விட்டு யிடித்து அரைக்காற்படி கொடுக்கத் தீரும்.

ஆனைநெருஞ்சிலையைச் சிறுநீர்விட்டிடித்துப் பிழிந்து அரைக்காற்படிச்சாறு உள்ளுக்குக்கொடுத்து உடலிலும்பூசத் தீரும்.

சீதமண்டலிகடி.

சீதமண்டலி கடித்தால் உடல் குளிரும் நடுக்கும் வியர்வை மிகவுமுண்டாகும்.

முத்தெருக்கஞ்செவி அல்லது வேப்பம்பட்டையைக் காடிவிட்டுச் சிதைத்து அரைக்காற்படி உள்ளுக்குக்கொடுத்து அதை காடியில் வேகவைத்து ஆவிபிடிக்கத் தீரும்.

திமிர்மண்டலிகடி.

பொன்முசுட்டைவேர் ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் அறைத்துக்கொடுத்து கடிவாயில் பூசத் தீரும்.

சகல விஷத்திற்கும்

## சஞ்சீவியுருண்டை.

பாரடா உயிர்தருஞ்சஞ் சீவியுண்டை
பகருகிறேன் துருசிதுத்தம் மிள்குசேர்த்து
நேரடா வாளமிந்த யிடைக்குப்போட்டு
நினைவாக வெலுமிச்சம் பழத்தின்சாற்றை

வாரடா மூன்றுநா ளூறவைத்து
வடித்தெடுத்து நாலாநா ளச்சாற்றாலே
தோடா வரைத்துண்டை செய்துக்கண்ணில்
தேய்த்துவிட வெவ்விஷமுந் தீர்ந்துப்போமே.

இதற்கு விபரம்.

துருசு துத்தம் மிளகு சமனிடை இந்த மூன்றுக்கும் சரியிடை வாளம்சேர்த்து எலுமிச்சம்பழச்சாற்றை மிதக்கவிட்டு மூன்றுநாளூறவைத்து நாலாநாளெடுத்து ஷை சார்விட்டரைத்து பயறளவெடுத்து கண்ணிற்றீட்டினால் சகல விஷமுந் தீரும்.

---

சகலவிஷத்திற்கும் நசியம்.

குப்பைமேனியிலை வெற்றிலை நவாச்சாரம் இவைகளைச் சிறுநீர்விட்டுத் தட்டி துணியிற்கட்டி நாசியில் நசியமிட சகல விஷங்களுந் தீரும்.

சோறிமண்டலி கடி.

நன்னாரிவேரை ஒரு தேசிக்காய்ப்பிரமாண மரைத்து ஆவின்பாலில் கொடுத்தாலும் வெள்வேலம்பட்டையைக் காடிவிட்டிடித்து அரைக்காற்படி சாறு கொடுத்தாலும் நீங்கும்.

| | |
|---|---|
| அமுக்குரா | இண்டு |
| சூரை | தக்காளி |
| புங்கு | இலுப்பை |

இவைகளைச் சிறுநீர்விட்டு அரைத்துப்பூச கடிவாய் வீக்கம் தீரும்.

---

இரத்தவிரியன், இரத்தமண்டலி, இரத்தப்புடையன்
முதலிய விஷங்கட்கு.

வெள்வேலம்பட்டையை ஆவின்மோர்விட்டு யிடித்துப்பிழிந்து அரைக்காற்படிச்சாறு உள்ளுக்குக் கொடுத்தாலும் அல்லது கஞ்சாங்கோரைச்சாற்றை அரைக்காற்படிவீதம் கொடுத்தாலும் கொடிவேலிவேரை யரைத்துக் கொட்டைப்பாக்குப்பிரமாணம் ஆவின்பாலில் கொடுத்தாலும் மேற்படி விஷங்கள் தீரும்.

| | |
|---|---|
| ஆடுதீண்டாப்பாளை | வெள்ளெருக்குவேர் |
| சவுதும்பைவேர் | மருக்காரைவேர் |

இவைகளை ஓர்நிறையா யரைத்து உடம்பிற்பூசி முழுக்க மேற்படி விஷங்கள் தீரும்.

சுருட்டைப்பாம்பு கடிவிஷத்திற்கும், குழிப்பாம்பு கடி விஷத்திற்கும்.

கொல்லங்கோவை
தலைசுரிளி
அமுக்குரு
முப்புரண்டி
கொடிவேலி
பேய்க்குமட்டி
அவுரி
ஆடுதீண்டாப்பாளை
வெள்ளெருக்கு

இவைகளின் மூலம் ஓர் நிறையாய்ச் சூரணஞ்செய்து பேய்ச்சுரைக்குடுக்கையில் வைத்துக்கொண்டு திருகடிப்பிரமாணம் வெந்நீரிற் கொடுக்கத் தீரும் மேற்படி விஷக்கடியால் உண்டாகும் புண்கள் ஆறிப்போகும்.

செவிப்பாம்பு என்ற செய்யான்கடி.

வெண்மை செம்மைநிறமாய் சிகம்புற்போல் நீண்டதாயிருக்கும் இது கடித்தால் தேகமெங்கும் சிறுதடிப்பும் நமைச்சலும் உண்டாகும் இது செவியில்நுழைந்தால் பிராணபயமுண்டாகும்.

கோவையிலை
வெற்றிலை
கொழுஞ்சி
வேலிப்பருத்தி
முடக்கொத்தான்

இவைகளி னிலைகளை யிடித்துச் ச்சாறுவாங்கி கொதிக்கவைத்துக் கடிவாயிற் பூசக் கடுப்பு தீரும்.

பேய்ப்பீர்க்கம்வேர் மிளகு இவைகளைச் சமன் பொடித்து ஆவின்வெண்ணெயில் மத்தித்து உள்ளுக்குக்கொடுக்கத் தீரும்.

தூதுளைவேர் நல்வேளைவேர் இவ்விரண்டையு மரைத்து கடிவாயிற் பூசத் தீரும்.

பூரான்கடித்தால்.

அரைக்காற்படி வன்னியிலைச்சாற்றில் காற்பலம் நாகதாளிவேரை அரைத்துக் கலக்கி ஆறுநாள் அந்திசந்தியில் கொடுக்கவும் உப்பு புளி தள்ளி பத்தியமிருக்க பூரான் செய்யான்விஷம் தீரும் மேலும் அவுரிச்சாற்றில் மிளகுத்தூள்சேர்த்து முன்போற் கொள்ள மேற்படி விஷங்கள் தீரும்.

செவ்வரனை நக்கினால்.

சுக்கு, வசம்புக்கரியும் ஓர்நிறையாய்ப் பொடித்து திருகடிப் பிரமாணம் உள்ளுக்குக் கொடுத்து வெண்சாரணைவேரை யரைத்

உடம்பிற்பூசி முறுக்கத் தீரும் மேலும் கச்சந்திராய்வேரும் உள்ளிப்பூடும் அறைத்துக்கொடுக்கத் தீரும்.

### பெரிய அரணை நக்கினல்.

மூக்கரைச்சாரணைவேரை அறைத்து ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் ஆவின்பாலிற்கொடுக்கத் தீரும்.

### சிலந்திப்பூச்சி கடித்தால்.

| | |
|---|---|
| ஆடுதீண்டாப்பாளைவேர் | இலவங்கப்பட்டை |
| மரள்கிழங்கு | ஏலம் |

இவைகளில் ஒன்றை கொட்டைப்பாக்களவு அறைத்து உள்ளுக்குக்கொடுத்து கடிவாயிலும்பூசத் தீரும்.

### பதினெட்டுவகை வண்டுகடிவிஷத்திற்கும்.

வண்டு கொல்லிப்பட்டையை அறைத்து கொட்டைப்பாக்களவு எட்டுநாள்கொடுத்து உடம்பிலும்பூசத் தீரும்.

ஆடுதீண்டாப்பாளை வேரையாவது, பிராய்வேரையாவது சூரணஞ்செய்து சாப்பிட்டுவரத் தீரும்.

வெள்ளருகு சிறியாநங்கை வெள்ளைக்காட்டான் இவைகள் மூன்றையும் சமூலம் சூரணஞ்செய்து சாப்பிட்டுவர சர்வ வண்டு கடி விஷங்களுந் தீரும்.

### செவ்வட்டை கடிவிஷம்.

எட்டிக்கொட்டையை ஆவினெய்யில் வேகவைத்து ஒரு காசிடைவீதம் சாப்பிட்டுவரத் தீரும்.

புனல்முருங்கைவேர் நத்தச்சூரிவேர் இவ்விரண்டும் சூரணித்து அதில் வேப்பம்பட்டைத்தைலம் காசிடைவைத்து உண்ண மேற்படி அட்டைவிஷமும் காட்டட்டைவிஷமுந் தீரும்.

### புழுதிஉண்ணி, சாட்டுண்ணி, சரகுண்ணி, இவைகள் கடித்தால்.

குப்பைமேனியிலையும் உப்பும் கசக்கித்தடவத் தீரும்.

காணுக்கடிக்கு கருஞ்சிவதைவேரை ஒரு கொட்டைப்பாக்குப்பிரமாணம் உள்ளுக்குக் கொடுத்து பெருஞ்சின்னியிலையை அறைத்து உடம்பிற்பூசி முறுக்கத் தீரும்.

சேஞ்சாரை, கருஞ்சாரை, வெண்சாரை, மஞ்சட்சாரை,
என்ற நான்குவகையி லொன்று அடித்தால்.

அவுரிவேரும் மிளகுமரைத்து உள்ளுக்குக்கொடுத்து அந்த இலைச்சாற்றை உடம்பிற்பூசி முறுக்கத் தீரும்.

தேள், நட்டுவாக்காலி கொட்டினால்.

| | |
|---|---|
| காஞ்சிரைவேர் | நாய்க்கொட்டான்வேர் |
| அவுரிவேர் | பொன்முசுட்டைவேர் |

இந்நான்கையும் ஓர்நிறையாயிடித்துச் சூரணஞ்செய்து திரிகடிப்பிரமாணம் இளவெந்நீரில் கொடுக்கத் தேள் நட்டுவாக்காலி விஷம் தீரும்.

| | |
|---|---|
| பொன்முசுட்டை | ஆடுதீண்டாப்பாளை |
| முப்புரண்டி | வேலிப்பருத்தி |
| நாகதாளி | நிலவேம்பு |

இவைகளின் வேரை ஓர்நிறையாயிடித்துச் சூரணஞ்செய்து திரிகடிப்பிரமாணம் வெந்நீரில்கொடுக்க ஷை விஷம் தீரும்.

| | |
|---|---|
| கொல்லங்கோவைக் கிழங் | மாவிலிங்கைவடவேர் |
| ஆடுதீண்டாப்பாளைவேர் | |

இந்த மூன்றில் எதையாவது ஒன்றை ஆதித்தவாரத்தில் வெட்டிவந்து கொஞ்சம் வெற்றிலையில்வைத்து தின்னக்கொடுத்து கடிவாயினும் பூசத் தீரும்

எட்டிவிரையை முலைப்பாலிலுரைத்துக் கொஞ்சம் உள்ளுக்குக்கொடுத்து கடிவாயிலும்பூசத் தீரும்.

முத்தின செவ்வலரிவேர் பட்டையை வெள்ளெருக்கம்பாலில் மூன்றுநாள் ஊறப்போட்டு நிழலிலுலர்த்திவைத்துக்கொண்டு கொஞ்சம் வெற்றிலையில்வைத்து தின்னக்கொடுத்து அதை எருக்கம்பாலிலுரைத்துக் கடிவாயிற்பூசத் தீரும்.

மனிதருடைய நிகத்தைச்சீவி துணியிற்சுருட்டி தீயிற்கொளுத்தி ஆத்தி அந்தப் புகையை நாசியிற்பிடிக்க மேற்படி விஷம் தெரியிறங்கும்.





ஸ்ரீ

சிவராமஜெயம்.

சகலமான சற்பவிஷத்திற்கும்

# பரணிமருந்து.



இந்த பரணிமருந்தானது எமது முன்னோர்கள்முதல் சமார் மூன்றுதலைமுறைகளாகக் கையாடிவரப்பட்டது மிகவும் அனுபோகமானது இந்த ஔஷதத்தை யாவரும் செய்துவைத்துக் கொண்டிருந்தால் விஷமென்பதற்கு எள்ளளவும் பயப்படவேண்டியதில்லை இம்மட்டில் சொல்லிய முறைகளெல்லாம் பல சாஸ்திரத்திலிருந்து மொழிபெயர்த்ததேயொழிய இந்த பரணிமருந்து ஒன்றுமாத்திரம் மிகவும் அனுபோகமானது.

| | | |
|---|---|---|
| வெள்ளைப்பாஷாணம் | விராகனிடை | 1 |
| மனோசிலை | ,, | 1 |
| இரசம் | ,, | 1 |
| துரிசி | ,, | 1 |
| நெல்லிக்காய்கெந்தகம் | ,, | 1 |
| பெருங்காயம் | ,, | 1 |
| வேப்பம்பருப்பு | ,, | 1 |

ஆக தினுசுகள் 7-க்கும் மொத்தம் விராகனிடை 7-ம் சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு விராகனிடை 14, ஆக மொத்தம் 21-விராகனிடையும் கலுவத்தில்போட்டு வெள்ளெருக்கம்பால் ஆழாக்கு பிடித்துவந்து கொஞ்சங்கொஞ்சமாய்விட்டு அரைக்கவும் ஷை ஆழாக்குப்பாலும்விட்டு இரண்டுஜாமம் அரைத்தபிறகு வேப்பெண்ணெய் அரையாழாக்கு விட்டு ஒருஜாமமரைக்கவும் மெழுகுபதமாயரைத்து வழித்து எருமைக்கொம்பு டப்பியில் வைத்துக்கொள்ளவும் விஷந்தீண்டி வந்தவர்களுக்கு உளுந்துப்பிரமாணம் யெடுத்து வெற்றிலையில்வைத்து உள்ளுக்குக் கொடுக்கவும் இதற்குப் பத்தியம் மோர்சாதம் கொடுக்கவும் அல்லது சுட்டபுளி வருத்த உப்புகூட்டிய மிளகுநீர்சாதம் கொடுக்கவும் அன்றிரவு நித்திரை செய்யக்கூடாது.

விஷம் தலைக்கேறி பற்கிட்டியிருந்தால் உச்சியில் கீறி அந்த கீறலுக்குள் இந்த மருந்தில் உளுந்தளவுவைத்து அழுத்தி திரும்பவுங் கொஞ்சம் மருந்துவைத்து அழுத்தித்தேய்த்து வட்டமாக

ஒட்டுபில்லைநறுக்கி உச்சியில் அழுத்தமாகவைத்துக் கட்டவேண்டியது வெந்நீரில் உளுந்தளவுமருந்திழைத்து பல்லைநீக்கி உள்ளுக்குச்செலுத்தவேண்டியது மூன்றேமுக்கால்நாழிகையில் மூர்ச்சையானவன்போலெழுந்திருப்பான் பத்தியம் முன்போலவே செய்யவேண்டும்.

ஆடு மாடு முதலிய மிருகங்களுக்கு குண்டுமணியளவு வெற்றிலைச்சாற்றிலாவது வெந்நீரிலாவது யிழைத்து மூங்கிற்குழையினால் உள்ளுக்குச் செலுத்தவேண்டியது குருவையரிசி கஞ்சிகாய்ச்சிக்கொடுக்கவும்.

பத்திய விபரம்.

முன்கூறியபடி மனிதருக்கு மருந்து கொடுத்தபிறகு 24-மணிநேரம்வரையில் ஆகாரம் தாகம் நித்திரை இதுகள் கூடாது அதன்பிறகு குருவையரிசிச்சாதம் மிளகுநீர் இவைகொடுக்கலாம் ஆடு மாடு முதலிய மிருகத்திற்குக்கூட 24-மணிநேரம்வரையில் ஆகாரம் வைக்கல் தண்ணீர் இதுகள் காட்டக்கூடாது அதன்பிறகு கருப்புநெல் அல்லது மணக்கத்தை அல்லது குருவையரிசியெடுத்து கஞ்சிகாய்ச்சி மாடுகளுக்கு 2-படி கஞ்சிக்கு அதிகப்படாமல் கொடுக்கவும் அதற்குப்பிறகு தாங்கள் வழக்கம்போல் கொடுக்கிற தீனி கொடுக்கலாம்.

மருந்துசெய்யும் காலம்.

இம்மருந்து செய்யவேண்டியவர்கள் ஆதிவாரத்தில் சகல மருந்தும் தயார்செய்துக்கொண்டு நடுவாசலில் சுத்திசெய்து கலுவமும் மருந்துகளும்வைத்து சூரியபகவானுக்கு தேங்காயுடைத்து தூபதீபங்கொடுத்து நமஸ்கரித்து ஆகாயத்தைப் பார்த்து கெருடபகவானை நினைத்து நமஸ்காரஞ்செய்து அறைக்கவேண்டியது அறைக்கும்போது புளிப்புமோரும் கூழும் கரைத்து திருப்தியாகச் சாப்பிட்டுவிட்டு அறைக்கவேண்டியது மேற்கூறிய கணக்குப்படி மூன்றுஜாமம் அறைத்தபிறகு விளக்கெண்ணைதேய்த்து தலைமுழுகவேண்டியது.

நல்லபாம்பு விஷத்திற்கு.

நேரும்வாளப் பருப்பெடுத்து நேர்ந்தசுன்னம் வைத்தறைத்து
காரும்வெற்றிலை பாக்கிலிட்டு கரையமென்னு முழிங்கிவர
மாரும்வாந்தி பேதியுமாய் மண்டையிலேறும் விஷந்தீரும்
பாரும்பத்தியம் பாசிபயர் பச்சரிசியும் பால்கூட்டே.

### தேள் கடி விஷத்திற்கு.

விருச்சிகமாத்திரை 50, எட்டிப்பழச்சுளையுடன் வெள்ளைப் பாஷாணம் பலம் 1, சிறுதுண்டுகளாகயிட்டு ஆட்டுக்கோமையம் வெள்ளெருக்கன்பால் இரண்டுபலம்விட்டு மூடி 40-நாள் புதைத் தெடுத்து பாஷாணமாத்திரம் யெடுத்து எருக்கம்பாலாலரைத்து மாத்திரைசெய்து ஜலத்திலிழைத்து கடிவாயில் தடவி அனல் காட்ட விஷம் நீங்கும்.

### சகல எலிகடிக்கும் வேறுமுறை.

ஆடுதின்னாப்பாளைவேர் விளாம்பட்டை மஞ்சள் வகைக்குப் பலம் கால், படி எள்ளெண்ணெயில் சித்திரமூலம்வேர் உத்தாமணிவேர் மிளகருணைவேர் வகை பலம் 1, பசும்பாலிலரைத்துக் கலக்கி காய்ச்சி வடித்து மூன்று காசிடையாக ஐந்துநாள் கொடுக்க உப்பு புளி நீக்கவும்.

### நல்லபாம்பு விஷத்திற்கு வேறு.

வெள்ளருகுயிலையை உள்ளுக்குக் கொடுத்தாலும் எருக்கிலை புகையிலையும் கசக்கி கண் காது நாசியில் நசியம்விடுவதாலும் தும்பை துளசி மிளகு உப்பு வெற்றிலை கசக்கி விடுவதாலும் விஷம் நீங்கும் தும்பைரசத்தில் மிளகு தூளிட்டுக் கொடுக்கவும்.

விஷநூல் முற்றுப்பெற்றது.

---





சிவராமஜெயம்.

## மூலிகைமர்மமென்னும்

# சாஸ்திரத்திற்கு அனுபந்தம்.

மூலிகைமர்மமென்னும் நூலில் முழுமையும் பச்சிலைப்பிர யோகமேயானபடியால் இதில் சேரவேண்டிய சில கடைசரக்கு ஜீவகெந்தபாஷாணதிமுறைகளை பார்வதிபரணியத்தில் பார்த்துக் கொள்ளலாமென்று மேற்படி நூலில் ஆங்காங்கு கண்டிருக்கிறது ஆகையால் மூலிகைமர்மத்தில் இன்னபக்கத்தில் சொல்லிய முறைக்கு இன்னபாகம் சேர்த்துக்கொள்ளவேணுமென்று இங்கிருந்து சொல்லப்பட்டுவருகிறது.

மூலிகைமர்மம் 4-வதுசைடிற் கூறிய

### பிராணசஞ்சீவி மாத்திரை.

| | |
|---|---|
| சுக்கு | காயம் |
| திப்பிலி | பூண்டு |
| மிளகு | நெல்லிக்காகெந்தகம் |

இவைகள் சமனிடையெடுத்து ஒன்றிரண்டாயிடித்து கல்வத்திலபோட்டு எலுமிச்சம்பழச்சார்விட்டு இரண்டுநாளூறியபிறகு திரும்பவும் பழச்சார்விட் டறைத்து உளுந்துபோலவும் கடலை போலவும் உருட்டி நிழலிலுலர்த்திவைத்துக்கொண்டு மூலிகைமர்மம் 4-வதுபேஜியில் சொல்லியிருக்கும் வயற்றுக்கடுப்புக்கு மேற்படி மர்மத்தில் சொல்லிய அனுபானத்துடன் கொடுத்தாலும் அல்லது இந்த பிராணசஞ்சீவிமாத்திரையைத் தனியாக வெந்நீரிலாவது கொதித்தண்ணியிலாவது சர்க்கரையிலாவது கொடுத்தால் வயற்றுக்கடுப்பு நிவர்த்தியாகும் பத்தியமில்லை.

மூலிகைமர்மம் 5-வது சைடிற் கூறிய

முறைக்கு அனுபந்தம்.

### கெற்பமுண்டாக எண்ணெய்.

| | |
|---|---|
| மிளகு | கஸ்தூரிமஞ்சள் |
| ஓமம் | ஜாதிக்காய் |
| திப்பிலி | வெள்ளைவெங்காயம் |
| இந்துப்பு | கருவண்டு |
| வசம்பு | கருங்கம்பளி |

இவைகள் வகைக்கு 3-விராகனிடையாக யெடுத்து இடித்து கல்வத்திலிட்டு கொஞ்சம் விளக்கெண்ணெய்விட்டு மைபோல் ஆகுமளவும் அறைத்து 25-பலம் விளக்கெண்ணெயில் கரைத்து அடுப்

பேற்றி மெழுகுபதமாய்க் காய்ச்சி வடித்துவைத்துக்கொண்டு கெர்ப்பமில்லாத பெண்களுக்கு ருதுஸ்நானம் வந்தபிறகு தலைமுழுகின மறுதினமுதல் பிரதிதினமும் காலையில் ஒரு உச்சிக்கரண்டி விதம் 15-நாள் கொடுக்கவும். இரண்டாவது தலைமுழுக்கு வந்த பிறகு முன்போலவே 14-நாள் கொடுக்கவும் எண்ணை சாப்பிடும் போது பத்தியம் சுட்டபுளி வறுத்த உப்பு சேர்க்கவேண்டியது கைப்பு புளிப்பு இல்லாதிருந்தால் மிகவும் உத்தமம் மறுமாதம் கெர்ப்பந்தரிக்கும்.

---

தாதுபுஷ்டிக்கு மதனசிந்தாமணி லேகியம்.

சுக்கு
திப்பிலி
மிளகு
ஏலம்
கிராம்பு
உளுந்து
எள்ளு
கோஷ்டம்
நெருஞ்சிவிரை
நீர்முள்ளிவிரை
பழுபாகல்விரை
கொத்தமல்லிவிரை
இந்துப்பு
வசம்பு
கடுக்காப்பூ
மதனகாமப்பூ
கிராம்பு
சோம்பு
இலுப்பைப்பூ
தென்னம்பூ
பனம்பூ
நெல்லிக்காய்வற்றல்
தாணிக்காய்தோல்
கடுக்காய்தோல்
வெந்தயம்
இலவம்பிசினி
இலவம்விரை
ஆலம்விரை
அரசம்விரை
அத்திவிரை
ஆவாரம்விரை
ஆளிவிரை
செங்கழுநீர்ப்பூ
இலவங்கப்பட்டை
ஜாதிக்காய்
ஜாபத்திரி
சீரகம்
கருஞ்சீரகம்
தண்ணிவிட்டான் கிழங்கு
நிலப்பனைக்கிழங்கு
அமுக்குறாங்கிழங்கு
வாழைக்கிழங்கு
சத்திசாரணை
சிறுகாஞ்சொரி
கொடிமுந்திரி
சீந்தில்
சிறுதேக்கு
குராசானிஓமம்

இவைகள் வகைக்கு ஒருபலமெடுத்து உலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ்செய்து வாயகண்ட பெருஞ்சட்டியில் 2-படி பால், 2-படி ஜலம்விட்டு அடுப்பேற்றி வாய்ப்புறத்திற்கு மெல்லியதுணியினால் வேடுகட்டி மேற்படி சூரணங்களைக் கொட்டி பரவவைத்து மேல்சட்டி கவிழ்த்துமூடி புட்டவியல்செய்யவும் இரண்டுபடி ஜல

மும் வற்றுமளவும் தீயெரித்து சட்டியையிறக்கி சூரணத்தையெடு த்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு முக்காற்படி பசும்பாலை அடுப்பிலிட்டு 15-பலம் சீனிச்சர்க்கரையிட்டுக் கலந்து பாகுபத மாய்ச்செய்து யிறக்கிக்கொண்டு மேற்படி சூரணத்தை சிறுகத் தூவி கிளறிக்கொண்டேயிருக்கவும் சூரணங்க ளியாவும் ஆனபி றகு காற்படி தேனில் காற்பலம் அபினியை யிழைத்து அந்தத் தேனைவிட்டுக் கிளறவும் அல்லது கையினால் நன்றாய்ப் பிசைந்து பீங்கானில் வைத்துக்கொண்டு ஒருவேளைக்கு கொட்டைப்பாக் குப்பிரமாணம் சாப்பிடவும் இப்படி காலை மாலை யிருவேளையும் 40-நாள் தின்னவேண்டியது.

இதற்குப் பத்தியம்.

பகற்காலத்தில் புளிப்புசேர்த்த குழம்பு ரசம் புதார்த்தமுத லியதும் ஆகும் இரவில்மட்டும் பால்சாதம் சாப்பிடவேண்டியது லாகிரிவஸ்துக்கள் கூடாது ஸ்திரீசஞ்சாரமில்லாதிருந்தால் உத்த மம் தேகம் பலக்கும் தாது புஷ்டியுண்டாகும்.

மதனகாமேசுர லேகியம்.

| | |
|---|---|
| சுக்கு | ஏலம் |
| திப்பிலி | முள்ளிலவம்பிசினி |
| மிளகு | சுத்திசெய்த கெஞ்சா |
| அதிமதுரம் | அமுக்குறைங்கிழங்கு |
| நீர்முள்ளிவித்து | தண்ணிவிட்டான் கிழங்கு |
| நெருஞ்சிவித்து | மருட்கிழங்கு |
| மல்லி | ஆனைத்திப்பிலி |
| கோஷ்டம் | சிறுநாகப்பூ |
| ஜாதிக்காய் | வெந்தயம் |
| உளுந்து | கொடிவேலிவேர் |
| எள்ளு | நெல்லிக்காய் |
| கொடிமுந்திரிப்பழம் | மாசிக்காய் |
| பேரீச்சங்காய் | தான்றிக்காய் |
| அதிவிடையம் | அபினி |
| கஸ்தூரிமஞ்சள் | சண்பகப்பூ |
| கதலிக்கிழங்கு | பெருஞ்சீரகம் |

இவைகள் வகைக்குப் பலம் கால், எடுத்து உலர்த்தியிடித்து வஸ்திரகாயஞ்செய்து இதற்குச் சரியிடை பூனைக்காலி வித்தின் பருப்புச் சூரணம்சேர்த்து வைத்துக்கொண்டு இரண்டுபடி பசும் பாலை அடுப்பிலேற்றி 20-பலம் சீனிபோட்டுக் கலந்து பாகுபத த்திலிறக்கி மேற்படி சூரணத்தைக் கொஞ்சங்கொஞ்சமாகத் தூவி கிளறிக்கொண்டிருக்கவும் யாவும் ஆனபிறகு ஆறவைத்து வே

ண்டியமட்டும் தேன்விட்டுப் பிசைந்து வைத்துக்கொள்ளவேண்டியது மேற்படி சூரணம் தூவிக் கிளறும்போது அபிரேக்குச்செந்தூரம் கால்பலம் கூடக்கலந்து தூவவேண்டியது இந்த லேகியத்தை ஒருவேளைக்கு தேத்தான்கொட்டைப்பிரமாணம் இருவேளையும் சாப்பிடவும் வீரியவிர்த்தியுண்டாகும் இந்திரியங்கட்டும் அதிசாரம் கிராணி பித்தசிலேத்துமம் வாய்வு இவையாவுந் தீரும்.

பத்தியம்.

புளி நல்லெண்ணை கடுகு இவைநீக்கி நெய் பால் முருங்கைப் பிஞ்சு இவை கூட்டவும் அபிரேக்குச்செந்தூரத்தைப் பின்வரும் செந்தூரபற்பத்துடன் சொல்லியிருக்கிறது.

மதனகாமரசக் குளிகை.

| | |
|---|---|
| பூமிசர்க்கரைக்கிழங்கு | பூனைக்காலிவித்து |
| நிலப்பனைக்கிழங்கு | முருங்கைவித்து |
| சமுத்திராசோகிவிரை | முத்தக்காசி |
| சாரப்பருப்பு | கிராம்பு |
| ஜாதிக்காய் | வெண்காரம் |
| ஜாபத்திரி | லிங்கம் |
| அபினி | வாலைரசம் |
| கெஞ்சா | |

இவைகள் வகைக்குப் பலம் அரை, இவைகளியாவும் பொடித்துக்கொண்டு ஒரு முத்தின தேங்காய் கொண்டுவந்து குடுமி முதலியதும்போக்கி தேங்காயின் கண்கள் மூன்றையும் துவாரம் செய்து ஜலத்தைக் கொட்டிவிட்டு முன் பொடித்திருக்கும் மருந்துகளை உள்ளேசெலுத்தி அந்த துவாரத்திற்குத்தகுந்த கார்க்கு அடைத்து மேலே ஒரு அங்குலகனம் சாணிதடவி யுலர்ந்தபிறகு முழப்புடமிடவும் சிரட்டை கருகினவுடனெடுத்து மேல்சிரட்டையை நீக்கிவிட்டு மற்றதைக் கல்வத்திலிட்டு மெழுகுபோலரைத்துக்கொண்டு தேற்றான்விரைப்பிரமாணம் உருட்டி சர்க்கரையில் பொதிந்துச் சாப்பிடவும் இப்படி காலைமாலை யிருவேளையும் தின்னவும் இராக்காலத்தில் புளிசேர்ந்த பதார்த்தங்கள் புளிப்பு பழவர்க்கங்கள் புளிப்புமோர் முதலியதும் ஆகாது பாலன்னம் புசிக்கவேண்டியது பகலில் சுட்டபுளி வருத்த உப்பு கூட்டிக்கொள்ளவும் தாதுபுஷ்டியுண்டாகும் புணர்ந்தால் கட்டு கலையாது இதற்கு மாற்று எலுமிச்சம்பழம்.

ஜெகபலக் குளிகை.

| | |
|---|---|
| சிறுபூனைக்காலி | முசுமுசுக்கை |
| நத்தச்சூரி | அகத்தி |

11

| | |
|---|---|
| நீர்முள்ளி | தேற்றான் |
| முருங்கை | அழிஞ்சி |
| அமுக்குரு | வில்வம் |
| செம்முள்ளி | நெல்லி |
| நெருஞ்சி | அத்தி |
| ஊமத்து | ஆத்தி |
| ஓரிலைத்தாமரை | அரசு |
| கெஞ்சா | ஆல் |
| ஆவரை | அவுரி |
| முள்ளி | புரசு |
| சங்கு | முசுட்டை |
| சுண்டை | சிவன்வேம்பு |
| திரிபலை | செந்நாயுருவி |
| கருவேல் | பாற்கொரண்டி |
| வன்னி | கொன்றை |
| மருது | எள்ளு |
| மாங்கொட்டை | கொத்தமல்லி |
| நிலப்பனைக்கிழங்கு | முருங்கை |
| அமுக்குருக்கிழங்கு | விளா |
| நன்னாரிவேர் | வேலா |
| சமுத்திராப்பழம் | வேம்பு |
| வாகை | இலவு |
| ஜாதிக்காய் | சீனிக்கற்கண்டு |
| ஜாப்பத்திரி | வெள்ளைகுங்கிலியம் |
| குரோசாணிஓமம் | மதனப்பூ |
| சர்க்கரை | அபிரோக்செந்தூரம் |

இவைகள் யாவத்தும் வகையொன்றுக்குப் பலம் அரைக் கால் உலர்த்தியிடித்து வஸ்திரகாயஞ்செய்து இந்தசூரணத்துடன அப்பிரச்செந்தூரம் சேர்த்துக்கொண்டு கொடிமுந்திரிப்பழச்சாற் றில் மூன்றுநாளரைத்து கடலைப்பிரமாணம் உருட்டி வேளையொ ன்றுக்கு ஒருகுளிகைவீதம் ஆவின்பாலில் ஒருமண்டலம் கைப்பு புளிப்புநீக்கி உட்கொள்ள யானைபலம் உண்டாகும் தாதுவிருத்தி விசேஷமுண்டாகும் சுக்கிலங் கட்டும்.

மதனசஞ்சீவி.

ஒருபடி ஆவின்பாலில் நாலுபங்கு கோதும்பைமாவும் இரு பதுபலம் சீனியையும்போட்டுக் கிண்டி காய்ச்சிப் பாகுபதத்தில் நீர்முள்ளிவிரை, நிலப்பனைக்கிழங்கு, லவங்கப்பட்டை, பனைவேர் வகைக்கு பலம் 4, கருவேலன்பிசின் கெஞ்சா வகைக்கு பலம்-2

சந்தணம் ஜாதிக்காய் கிராம்பு வெருஞ்சீரகம் வகைக்கு விராகனிடை 2, திப்பிலி பலம் அரை, இவைகளை யிடித்துச் சூரணித்துத் தூவி நெய் படி அரை, விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலிறக்கி ஆத்திப் பேரீச்சம்பழம் பலம் 4, தேன் பலம் 10, சேர்த்துப் பிசைந்து வேளையொன்றுக்கு கொட்டைப்பாக்குப்பிரமாணம் சாப்பிட்டுவர விந்து ஊறும் போகம் மிகும்.

சொர்ன்னபற்பக் குளிகை.

| | |
|---|---|
| அபினி | சாம்பிராணிப்பூ |
| மதனகாமப்பூ | முருங்கைவித்து |
| கிராம்பு | ஆலம்வித்து |
| ஜாதிக்காய் | அரசம்வித்து |
| மராட்டிமொக்கு | அத்திவித்து |
| அதிமதுரம் | தங்கபற்பம் |

இவைகளை ஓர்நிறையாயெடுத்து முருங்கைப்பூவின் சாற்றால் அறைக்கவும் மிகவும் நுண்ணிய மைபோலாட்டி சிறுசுண்டையளவு மாத்திரைசெய்து வைத்துக்கொண்டு பசும்பாலில் முருங்கைப்பூபோட்டுக்காய்ச்சிய காற்படிபாலில் ஒருஉருண்டை யிழைத்துச் சாப்பிடவும் இப்படி யிரவில் ஒரொவேளையாக ஒருமண்டலம் சாப்பிடவேண்டியது உப்பு புளி நீக்கி பத்தியம் பாலன்னம் தின்னவேண்டியது பெண்மயக்கம் லாகிரி புகையிலை இவை நீக்கியிருந்தால் திரேகம் தங்கமயமாயிருக்கும் பலக்கும் தாது கட்டும் மேற்படி ஒருமண்டலமானபிறகு மனம்போல் நடக்கலாம்.

மேற்கூறிய தங்கபற்பம் பின்வரும் சிந்தூரபற்பம் முதலிய வகுப்புகளுடன் சொல்லப்படும்.

பூரண மதனவல்லாதி.

| | |
|---|---|
| நாயுருவிவித்து | அரசம்வித்து |
| நத்தைச்சூரிவித்து | ஆலம்வித்து |
| பாற்சுண்டிவித்து | அத்திவித்து |
| கெஞ்சாவித்து | முருங்கைவித்து |
| துளசிவித்து | நீர்முள்ளிவித்து |
| திருநீற்றுப்பச்சைவித்து | பூனைக்காலிவித்து |
| கருவேலன்வித்து | ஆவாரைவித்து |
| சிறுகீரைவித்து | பொன்னுவாரைவித்து |
| புரசைவித்து | தேற்றான்வித்து |

இவைகள் வகைக்கு களஞ்சு-2.

| | |
|---|---|
| சுக்கு | ஓமம் |
| திப்பிலி | வாலுளுவையரிசி |

| | |
|---|---|
| மிளகு | கோஷ்டம் |
| ஜாதிக்காய் | சாரப்பருப்பு |
| ஜாப்பத்திரி | வால்மிளகு |
| இராம்பு | மதனகாமப்பூ |
| சோம்பு | சிறுநாகப்பூ |
| கருவாப்பட்டை | சர்க்கரை |
| ஏலம் | அபினி |

இவைகள் 18-தினுசும் வகைக்கு களஞ்சி-3.

| | | |
|---|---|---|
| எள்ளு | பலம் | 2 |
| பூமிசர்க்கரைக்கிழங்கு | ,, | 2 |
| சுத்திசெய்த சேங்கொட்டை | ,, | 2 |
| அமுக்கனுங்கிழங்கு | ,, | 1 |
| கொடிமுந்திரிப்பழம் | ,, | 1 |
| பேரீச்சம்பழம் | ,, | 1 |
| சுத்திசெய்து வருத்த கெஞ்சா | ,, | 4 |

இவைகள் யாவும் கல்லுரலிற்போட்டு நாலுஜாம மிடித்து மெல்லிய தூளாக யாவும் கலந்தபிறகு சீனி 5-பலம், சற்கண்டு 25-பலம்சேர்த்து மெழுகுபோலிடித்துவைத்துக்கொண்டு வேளை பொன்றுக்கு அரைவிராகனிடைவீதம் பசும்பாலில் சாப்பிட விந்து கட்டும் சற்று மயங்கிநல் எலுமிச்சம்பழச்சாறும் ஈருள்ளிச்சாறும் கொஞ்ச மருந்திநல் மாறும்.

மதனப் பால்.

சந்தனம் தேற்றான்விரை முருங்கைவேர்ப்பட்டை இவைகள் சமனிடையெடுத்து தேங்காய்ப்பாலிலரைத்து வேளைக்கு புன்னக்காய்வீதம் உட்கொண்டுவர விந்து கட்டும் வலிவுண்டாகும் புளி நீக்கி பாலன்னமுண்ணவும்.

இதுவுமது.

முருங்கைப்பூ நெருஞ்சிப்பூ இளந்தென்னம்பாளையுள்ளிருக்கும் அரிசி இவை சமன்கொண்டு பால்விட்டரைத்து பாலில்காய்ச்சி யுண்டுவர தாது விருத்தியுண்டாம்.

மூலிகைமர்மம் 9-வதுசைடிற் சொல்லியிருக்கும்

சஞ்சீவிமூலிகையென்னும்

அழுகண்ணிச்செடியின் விபரம்.

இந்துஸ்தானிபாஷையில் (றாதந்தியிலே) என்னும் அழுகண்ணியிலேயானது கடலைபிலேபோல் சிறிதாயும் வழுவழுப்புள்ளதாயும் நற்புறம் பூமியைநோக்கியும் பிற்புறம் ஆகாயத்தைநோக்கியு

மிருக்கும் அதில்நின்று ஜலமொழுகுவதைப்போல் தோற்றும் இது நல்ல ருசியையுடையதாகவும் கொஞ்சம் உப்புகரித்துமிருக்கும் இந்தச் செடியிருக்கும் பூமி கசிவாய்க் கருத்திருக்கும் எறும்புகளெப்போதும் மொய்த்துக்கொண்டிருக்கும் உவர்நிலத்தில் முளைக்கும் இதில் இரண்டுஜாதியுண்டு அதிலொன்று ஒருமுழஉயரமும் மற்றொன்று ஒருசாணுயரமுமிருக்கும்.

### மூலிகைமர்மம் 14-வது சைடில் சொல்லிய சர்வசுரக் கிஷாயத்திற்கு அனுபந்தம்.

### சர்வசுரக் குளிகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கெந்தகம் | விராகனிடை | 1 | சுக்கு | விராகனிடை | 4 |
| இரசம் | ,, | 1 | திப்பிலி | ,, | 4 |
| நாபி | ,, | 1 | மிளகு | ,, | 4 |
| ஊமத்தன்விரை | ,, | 3 | (பழச்சாறு) | | |

இவைகள் கலுவத்திலிட்டு எலுமிச்சம்பழச்சார்விட்டு 3-ஜாமமட்டுமரைத்து மிளகளவு மாத்திரைசெய்து வைத்துக்கொண்டு பித்தசுரத்திற்கு இஞ்சிச்சாற்றிலும் வாதசுரத்திற்கு முருங்கைப் பட்டைசாற்றிலும் கொடுக்கவும் குளிர்சுரத்திற்கு இஞ்சி பூண்டு முருங்கைப்பட்டை யிம்மூன்றுமிடித்து சாறுவாங்கி சுரசஞ்செய்து முறித்த தேன் முலைப்பாலில் கொஞ்சம்விட்டு இரண்டுமாத்திரைகளிழைத்துக் கொடுக்கவும்.

### இதற்குக் கிஷாயம்.

பேய்ப்புடல், கோரைக்கிழங்கு, பற்பாடகம், சீந்தில், சுக்கு இவை சமன்கொண்டு யிடித்து எட்டொன்றாக கியாழம்வைத்து கொடுக்கவும் அல்லது மூலிகைமர்மம் 14-வது சைடில் சொல்லியிருக்கும் கியாழம் கொடுக்கவும் காலை மாலை மாத்திரை கொடுத்தபிறகு இந்த கியாழம் கொடுக்கவேண்டியது.

### பத்தியம்.

அசாத்திய சுரமானால் கோதுமைநொய்யை வறுத்து ஜலம் விட்டு கஞ்சிகாய்ச்சி வறுத்தஉப்புபோட்டுக் கொடுக்கவும் புளிப்புகூடாது. சற்று லகுவான சுரமானால் சுட்டபுளி வறுத்தஉப்பு கத்திரி முருங்கை அவரை இதுகளின்பிஞ்சுகூட்டவும் சுரம்விட்டபிறகு மூன்றுநாள் பார்த்து காய்ச்சிய எண்ணெயினால் தலைக்கு வார்க்கவும்.

இந்த மாத்திரையை தலைவலி உடம்பு அனல் கைகால் அசதி இப்படியுள்ளவர்கள் இரண்டுமாத்திரையெடுத்து ஒரு வெற்றிலையில்வைத்து மடித்துத்தின்னவும் இப்படியிருவேளையும் தின்னவும் பத்தியமில்லை மிளகுநீர்சாதம் கச்சைக்கருவாடு காரைப்பொடி சுரா இதுகள் குழம்புசெய்து சாப்பிடலாம்.

## ஜன்னி சீதளம் முதலானதற்கு
## ஆனந்தவைரவமாத்திரை.

நாவிக்கிழங்கு
இரசம்
கெந்தகம்
மனோசிலை
லிங்கம்
வெண்காரம்

இவைகள் ஆறுதினுசும் சமனிடையெடுத்து கலுவத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாற்றால் 4-ஜாமமறைத்து சிறு பயறளவு மாத்திரைகள்செய்து நிழலிலுலர்த்தி சீசாவில்போட்டு வைத்துக்கொள்ளவும்.

### இதற்கனுபானம்.

ஜன்னிக்கு முலைப்பாலில் முருங்கைப்பட்டை சுரசம் இதுகளில் இரண்டுமூன்றுவேளை கொடுக்கவும் குளிர்சுரத்திற்கு இஞ்சி பூண்டு இதுகள் நசுக்கி சாறுவாங்கி சுரசம்செய்து அதில் இரண்டு மாத்திரை யிழைத்து முறித்த தேன் முலைப்பால் இதுகள் கொஞ்சம்விட்டுக் கொடுக்கவும் இப்படி 2-3-வேளை கொடுக்க நிவர்த்தியாகும் இச்சாபத்தியம் கோதுமைக்கஞ்சி பார்லியரிசிக்கஞ்சி காப்பி பிஸ்கோத்து இதுகளும் கொடுக்கலாம்.

## மூலிகைமர்மம் 17-வது சைடில் சொல்லிய கண்ணொளிவுசிகிச்சைக்கு அனுபந்தம்.

## நேத்திரரோகம் ௯௬-க்கும் தைலம்.

| | | |
|---|---|---|
| தாழம்விழுதுச்சாறு | படி | வ |
| நெல்லிக்காய்ச்சாறு | ,, | வ |
| கரிசலாங்கண்ணிச்சாறு | ,, | வ |
| பொன்னாங்காணிச்சாறு | ,, | வ |
| பசும்பால் | ,, | வ |
| இளநீர் | ,, | வ |
| சிந்தில்சாறு | ,, | வ |
| நல்லெண்ணை | ,, | உ |

இவைகள் யாவும் ஒன்றாய்க்கலந்து அடுப்பேற்றி

இலுப்பைப்பூ
சந்தணம்
அதிமதுரம்
ஏலம்
லவுங்கம்
லவுங்கப்பத்திரி
தாமரைக்கிழங்கு
நாகேசுரம்
வெட்டிவேர்
கோரைக்கிழங்கு
ஜாதிக்காய்
தேவதாரம்
விளாமிச்சம்வேர்
ஆலம்விழுது

வெட்டிவேர்
வில்வப்பழச்சதை
செங்கழுநீர்க்கிழங்கு
கீழாநெல்லிவேர்

இவைகள் வகைக்குப் பலம் கால், எடுத்து பசும்பால்விட்டு அறைத்துப்போட்டுக் கலக்கி காய்ச்சவேண்டியது மெழுகுபதமாய்க்காய்ச்சி வடித்து வாரத்திற் கிருவிசை தலைமுழுகிக்கொண்டு வந்தால் நேத்திரரோகமியாவும் தீரும் அன்று பகல் நித்திரையும் வெய்யலில் திரிச்சலுங்கூடாது வேறேபத்தியங் கிடையாது.

## குளிர்ச்சிக்கி வேறுவிதத்தைலம்.

| | | |
|---|---|---|
| வில்வப்பழச்சதை | பலம் | 2 |
| வெந்தயம் | ,, | 2 |
| கார்கோலரிசி | ,, | 2 |

இவைகளை பசும்பால்விட்டு மைபோலறைத்து 40-பலம் நல்லெண்ணெயிற்போட்டுக் கரைத்து பதமாய்க்காய்ச்சி முழுகிவந்தால் உடம்புங் கண்களும் குளிர்ச்சியுண்டாகும் சகலமான சூடும் தணியும்.

மேற்படி நேத்திரரோகத்தைப்பற்றிய தைலமுறையானது இவ்விடத்தில் இரண்டுபாகம் சொல்லப்பட்டிருக்கிறது ஆகையால் இந்த நேத்திரரோகத்திற்குரிய பாகங்கள் ஆதியோடந்தமாக 96-வியாதியின் குணமும் அடையாளமும் அவைகளுக்குப் பலவித சிகிச்சைகள் முழுமையும் விபரமாய்ப் பார்க்கவேண்டியவர்கள் திருநேத்திரசிந்தாமணி என்னும் சாஸ்திரத்தில் பார்வையிடலாம். உயர்ந்த கடிதத்தில் சுத்தமாகப் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றது.

மூலிகைமர்மம் 17-வது சைடில் கூறியதற்குரிய

சகலமாந்தத்திற்கும்

## பாலசஞ்சீவிக் குளிகை,

| | | |
|---|---|---|
| சுத்திசெய்த வாளம் | விராகனிடை | 8 |
| சுக்கு | ,, | 7 |
| மிளகு | ,, | 6 |
| நெல்லிக்காய்கெந்தி | ,, | 2 |
| வெண்காரம் | ,, | 2 |
| இரசம் | ,, | 2 |
| கடுகுருணி | ,, | 2 |

இவைகளை மேற்கூறிய நிறைப்படி நிறுத்து கலுவத்திலிட்டு இலைக்கள்ளிச்சாற்றால் மெழுகுபோலறைத்து மிளகளவு மாத்தி

ளைகள்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும். இந்த மாத்திரையை சகல மாந்தத்திற்கு முபயோகிக்கலாம் நொச்சில் ஆடாதோடை துளசி கரசலாங்கண்ணி கம்மாறுவெற்றிலை இதுகளை வகைக்கு கொஞ்சமெடுத்து சட்டியிலிட்டு வதக்கி சாறுபிழிந்து அந்தச் சாற்றில் 1-அல்லது 2-மாத்திரைகளிழைத்து வார்க்கவும் காலையில் வதக்கிப் பிழிந்துக்கொண்ட மூலிகைத் திப்பியை வைத்திருந்து மாலையில் சட்டியிலிட்டு சாம்பலாகுமளவும் தீயெரித்து பஸ்பமானபிறகு அத்துடன் கருஞ்சீரகம்போட்டு நன்றாய்ப் பொரிந்து அடங்கியபிறகு அத்துடன் கொஞ்சம் மிளகுபோட்டு கொஞ்சம் சுக்கு நறுக்கிப்போட்டு ஜலம்விட்டு நாலுக்கொன்றாய் கியாழமிட்டு 2-சங்களவு வார்க்கவும் இப்படி 2-3-நாள் வார்க்க சகலமான மாந்தமும் தீரும்.

மாந்தவியாதியினால் ரொம்பவும் யிளைத்து சக்தியற்ற குழந்தைகளுக்கு காலையில் இரண்டுமாத்திரையெடுத்துப் பொடித்து ஒருசங்கு நல்லஜலத்தில் கலந்து வார்த்துவிடவும் 1-அல்லது 2-விசை மலப்பிரவிர்த்தியாகும் சுரம் அள்ளு வயறுப்பிசம் முதலானதும் கண்டிக்கும் மாலையில் கருஞ்சீரகம் ஓமம் சாம்பலாக்கி அதற்குமேல் மிளகு கொஞ்சம்போட்டு கடலையிட்டுக்கொண்டு அதற்குமேல் கொஞ்சம் சுக்கு நறுக்கிப்போட்டு தண்ணீர்விட்டு நாலுக்கொன்றாய் கியாழம்வைத்து 2-சங்கு வார்க்கவும் இதற்குத் தாயார் பத்தியமிருக்கவேண்டியது. அதாவது வாய்வான பதார்த்தம்தள்ளி மற்றதெல்லாம் ஆகும்.

## பிள்ளைகள் கொருகொருப்புக்கு மாத்திரை.

| | |
|---|---|
| பாப்பாரமுள்ளிப்பூவின் யிதழ் | கால்துலாம் |
| ஓமப்பூ | அரிக்கால்துலாம் |
| கோரோஜனம் | அரிக்கால்துலாம் |
| கஸ்தூரி | ஒருகுண்டுமணி |
| மூசாம்பரம் | கால்துலாம் |
| குக்குலிப்பூ | 5-குண்டுமணி |

இதுகளை பச்சைத்தண்ணீர்விட்டறைத்து கம்பு அல்லது பயறுப்பிரமாணம் உருட்டி நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு பிள்ளைகள் நெஞ்சில் கபங்கட்டிக்கொண்டு கொருகொருப்புண்டானால் இந்த மாத்திரை கொடுக்கவும்.

இரவில் படுக்கும்போது குழந்தைகள் திடமறிந்து 1-அல்லது 2-மாத்திரையெடுத்து முலைப்பாலிலிழைத்துக் கொடுக்கவும் இப்படி 2-நாள் கொடுத்தால் கொருகொருப்பு வயர்சுரப்பு யிருமல் இவை தீரும் இரவில் கொடுத்தால் பத்தியமிருக்கவேண்டிய அவசியமில்லை.

பிள்ளைகளுக்கு இதேபிரகாரம் முலைப்பாலிலிழைத்து காலை யில் கொடுத்தால் பத்தியமிருக்கவேண்டியது மீன், கருவாடு, கறி இதுகள் ஆகாது இச்சாபத்தியமிருக்கவேண்டும்.

பெரியவர்களுக்கு மார்சளி ஐலுப்பு சீதளம் இதுகளுண்டா ளுல் இரண்டுமாத்திரையெடுத்து வெற்றிலையில்வைத்து மடித்துத் தின்னவும் இச்சாபத்தியம் 2-3-வேளை தின்னவும்.

பிள்ளைகள் அள்ளுமாந்தத்திற்கு மாத்திரை.

| | | |
|---|---|---|
| முலைப்பாலில் ஒருநாள் ஊறவைத்து | | |
| எடுத்த ரசச்செந்தூரம் | துலாம் | 1 |
| சயிந்தலவணம் | ,, | 1 |
| திப்பிலி | ,, | 1 |
| சுக்கு | ,, | 1 |
| மாசிக்காய் | ,, | அரை |
| சுத்திசெய்த வாளம் | ,, | அரை |
| கோரோஜனம் | ,, | அரை |
| குங்குமப்பூ | ,, | அரை |
| கஸ்தூரி | 3-குண்டுமணியிடை | |

இவைகள்யாவும் மேற்கூறிய நிறைப்படி நிறுத்தெடுத்து கல் வத்திலிட்டு குப்பைமேனிச்சார்விட்டு இரண்டுநாளரைத்து பயறு பிரமாணம் மாத்திரைகள்செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

இதற்குஅனுபானம்.

பிரண்டைச்சாற்றிலாவது, துளசிச்சாற்றிலாவது, குப்பை மேனிச்சாற்றிலாவது கொடுக்கலாம் 1-அல்லது 2-மாத்திரைக ளிழைத்துக் கொடுக்கவும் வயறுப்பிஷம், மேல்சுவாசம், அள்ளு மாந்தம் முக்கல்முதலிய வியாதிகள் தீரும். இதற்குப் பத்தியம் வருத்த உப்பு சுட்டபுளி கூட்டவேண்டியது அவரவர்கள் குழ ந்தையின் திடம் அறிந்து வழக்கம்போல் பத்தியமிருக்கவேண்டி யது தாய்மார்களின் கடமையாம்.

மூலிகைமர்மம் 20-வதுசைடிற்கூறிய புறவீச்சுக்கு

சிவநாதத்தைலம்.

| | |
|---|---|
| இரசம் | மிளகு |
| கெந்தகம் | சேங்கொட்டை |
| வெள்ளுள்ளி | வகைக்கு காற்பலம் |

இவைகளை கலுவத்திலிட்டு பசும்வெண்ணைபோட்டரைத்து துணியில் ஊட்டி வத்திபோல் திரித்து இரும்புக்கம்பியில் கோர்த்து தீயிற்கொளுத்தி சாய்த்துப்பிடிக்க தைலமிறங்கும் அந்த தை

லத்தை பீங்கானில் விழும்படி பிடித்துக்கொண்டு அதையெடுத்து சீசாவில் பதனம்பண்ணி வைத்துக்கொள்ளவும் புறயீசிவு அல்லது புரங்கழுத்து வலிப்பு நரம்பிழுப்பு இதுகளுக்கு ஒரு காசயிடை தைலத்தை வெற்றிலையில்விட்டு உள்ளுக்குக் கொடுத்துவிட்டு மேலுக்கும் பூசித்தேய்க்க நிவர்த்தியாக்கும் பத்தியம் கிடையாது.

புறவீச்சுக்கு வேறு.

இஞ்சிச்சாறு, முலைப்பால், தேன் இவைகளைச் சமமாய்க்கலந்து மேற்படி வியாதிகண்டவுடன் உள்ளுக்குக்கொடுக்கவும். மிஞ்சினால் வேப்பெண்ணெயாவது முன்சொல்லிய தைலமாவது கொஞ்சம் விட்டுக் கொடுக்கவும் தீரும்.

அல்லது மேற்படி சேங்கொட்டை சேர்ந்தசுடர் தைலத்தை ஒருகாசயிடை உள்ளுக்குக் கொடுத்தவுடன் எருக்கம்யிலையைக் கொண்டுவந்து வேப்பெண்ணெ தடவி படைநெருப்பிலிட்டு வதக்கி புரங்கழுத்தின்மேலிட்டு சூடுரைக்கும்படி அழுத்தமாய் ஒத்திடம் செய்யத் தீரும்.

ஜன்னியைச்சேர்ந்த
தீராத தலைவலிக்குப் புகை.

பெருங்காயம், ஓமம், சுக்கு, சாம்பிராணி, மிளகு, சித்தாத்தை, கழற்சிப்பருப்பு, சீரகம், லிங்கம், இவைகள் சமனிடையெடுத்து எருக்கம்பால்விட்டு மைபோலரைத்து சீலையில் தடவி திரியாகத் திரித்து உலர்த்தி யெடுத்து ஒரு முனையைத் தீயிற்காட்டி அந்த புகை பிடிக்கவும் இந்த புகையை இரவில் போஜனம்செய்து படுக்கும்போது தேகதிடமறிந்து 1-அல்லது 2-3-நிமிஷம்வரையில் நாசியில் புகைபிடித்து பிறகு நித்திரை செய்யவேண்டியது இத்துடன் மறுதின மிரவில் படுக்கும்போது பிடிக்கவேண்டியது இப்படி இரண்டுமூன்றுநாள் பிடித்தால் தீராத தலைபாரம் புறவலி இதுகள் தீரும் சீதளபதார்த்தம் ஆகாது சம்போகம் ஆகாது வேறு பத்தியமில்லை.

மூலிகைமர்மம் 38-வதுசைடிற்கூறிய
சர்வ சூட்டிற்கும் கூழ்பாண்டலேகியம்.

இரண்டுபடி பசம்பாலில் இருபதுபலம் சீனிபோட்டுக் கரைத்து பாகுசெய்து அதில் பெரும்பூசினிக்காயை மேற்றோல்சீவி நறுக்கி உலர்த்தியிடித்து வடிகட்டின பொடி படி-1, கோஷ்டம் லவங்கம் கஸ்தூரிமஞ்சள் இந்துப்பு திரிபலை மதுரம் ஜாதிப்பத்திரி கடுகு வகைக்குப் பலம் அரைக்கால் சூரணித்து யாவுங்கலந்து தூவி அறைப்படி நெய்விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலிறக்கி வேளையொன்றுக்கு கொட்டைப்பாக்குப்பிரமாணம் சாப்பிடவும் வரட்சி எலும்புருக்கி சிரங்கு நீர்கடுப்பு கல்லடைப்பு வெட்டை தீரும் தேகம் குளிர்ச்சியடையும் கைகண்டது.

## சர்வ சூடு, தேகவூரல், நமை முதலியதற்கு

## சாமிநாத எண்ணெய்.

சித்தாமணக்கெண்ணெ சேர் 1, எலுமிச்சம்பழச்சார் சேர் 1, பூந்திப்பட்டை பலம் 1, கழச்சிபருப்பு 3, இவைகளை அறைத்து எண்ணெயிற்கலந்து மெழுகுபதமாய்க்காய்ச்சி யிறக்கிக்கொண்டு இந்த எண்ணெயினால் பேதிக்குச் சாப்பிட்டுவிட்டு மறுநாள்முதல் கொஞ்சங்கொஞ்சமாய் 10-நாள் சாப்பிட்டுக்கொண்டுவந்தால் ஊரல் நமை சூடு சொஸ்தமாகும் இச்சாபத்தியம் இராஜவைத்திய சிந்தாமணிமுறை.

## சகல வாய்வுகளுங் கண்டித்து குளிர்ச்சியுண்டாக

## அமிர்தாதிச் சூரணம்.

| | |
|---|---|
| ஏலம் | மஞ்சிட்டி |
| லவங்கம் | கடுகுருணி |
| அதிமதுரம் | திப்பிலிமூலம் |
| நற்சீரகம் | ஜாதிக்காய் |
| கருஞ்சீரகம் | கிராம்பு |
| மகரப்பூ | வசுவாசி |
| குராசாணிஓமம் | சிற்றரத்தை |
| வால்மிளகு | சித்திரமூலம் |
| திப்பிலி | நிலவாகை |
| வாய்விளங்கம் | நிலவேம்பு |
| ஜடாமாஞ்சி | குங்குமப்பூ |

இவைகள் வகைக்கு சமனிடைபெடுத் திடித்துச் சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து இதற்குச் சரியிடை சீனிகூட்டி வேளைக்கு திருகடிப்பிரமாணம் சாப்பிட்டு கொஞ்சம் வெந்நீர் குடிக்கவும் இப்படி மண்டலக்கணக்காய் தின்றுவந்தால் கை கால் உளைச்சல் உள்ளுருக்கி எலும்புருக்கி பிரமியம் கரப்பான் மூலம் வாதம் பித்தம் ஊஷ்ணவாய்வுமுதலிய சகலவாய்வுந்தீர்ந்து நல்ல பசிதீபன முண்டாகும் தேககுளிர்ச்சியுண்டாகும் இதற்கு இச்சாபத்தியம்.

## புழுவெட்டினால் மயிர் உதிர்வதற்கு மருந்து.

பொரித்த வெண்காரம் ஒருவிராகனிடையை வெங்கலத்தட்டில்வைத்து அதின்பேரில் கரசனுங்கண்ணிச்சார்விட்டு இரும்பினால் 3-நாழிகையிழைத்து பிறகு வெண்ணெய்சேர்த்து சங்கினால் 3-நாழிகை யறைத்து வழித்து டப்பியில் வைத்துக்கொள்ளவும் புழுவெட்டினால் மயிர் உதிருமிடத்தில் இந்த மையை 5-நாள் தடவினால் மறுபடியும் மயிர் முளைக்கும்.

விளாவிக்கத்திற்கு மேழுகு.

கெச்சக்காய்ப்பருப்பு வெள்ளைக்குண்டுமணி மொடக்கொத்தான் எருக்கம்விரை காட்டுக்கொள்ளு இவை சமனிடைசேர்த்து கல்லுரலிற்போட் டிடித்து பிறகு கலுவத்தில்போட்டுக்கொண்டு ஆமணக்கெண்ணெய்விட்டு மெழுகுபோலறைத்து கொட்டைப்பாக்குப்பிரமாணம் ஒருவேளைக்குச் சாப்பிடவும் விளாவீக்கம் அண்டவாய்வு தீரும் பத்தியம் உப்பு தள்ளுபடி வீக்கம் அதிகமாயிருந்தால் ஒட்டைலத்தி கெச்சக்காயிலை யிரண்டையும் வருத்திடித்து விரைக்கு ஒத்திடங்கொடுத்தால் அனுகூலமாகும்.

வாந்திபேதிக்கு மாத்திரை.

மிளகு பெருங்காயம் அபினி காலேவீசம்பலம் இவைகளைச்சேர்த்து மைபோலறைத்து 12-மாத்திரைகளாகச் செய்துக்கொண்டு அரைமணிக்கொருதரம் வாந்திபேதி நிற்கிறவரையில் கொடுக்கவேண்டியது 7-முதல் 14-வயதுள்ளவர்களுக்கு பாதிமாத்திரையாகக் கொடுக்கவேண்டியது இந்த மாத்திரை வங்காளதேசத்தில் மிகவும் அனுபோகமானதாக ட்ரஸர் ஜெகந்நாதநாயகரால் சொல்லப்பட்டது.

இரத்த அதிசாரத்திற்கு.

பெருமரப்பட்டை பலம் 1, மாதுளைச்சாறு வாழைப்பூசாறு தென்னம்பூசாறு வகைக்கு வீசம்படி இந்தச் சாற்றால் மேற்படி மருந்தை அறைத்து ஒன்றாய்க்கலக்கி 5-நாள் உட்கொண்டால் இரத்த அதிசாரம் பேதி தீரும்.

சேதுபண்டிதர் தாம்பிராதிமாத்திரை.

| | | |
|---|---|---|
| சங்கு | விராகனிடை | 6 |
| சுக்கு | ” | 1 |
| திப்பிலி | ” | 10 |
| அதிமதூரம் | ” | 12 |
| தாம்பிரஅறப்பொடி | | 12 |
| துத்தம் | விராகனிடை | 5 |
| கடுகுரோகணி | ” | 6 |
| கோஷ்டம் | ” | 5 |
| இந்துப்பு | ” | 5 |

இவையிடித்து வஸ்திரகாயஞ்செய்து பழச்சார்விட்டறைத்து அந்த மருந்தை செப்புப்பாத்திரத்தில் தடவிவைத்து மறுநாள் வழித்தெடுத்து முன்போலறைத்து மேற்படி பாத்திரத்தில் தடவிவைத்து மறுபடியும் வழித்தறைத்து தடவிவைக்கவும் இப்படி 21-நாள் செய்து பிறகு மிளகுபோல் மாத்திரைசெய்து வைத்துக்கொண்டு தண்ணியிலிழைத்து கண்ணில் தடவினால் தூர்மாமிசவளர்த்தி நீர்முட்டல் காசம் படலம் அமரம் திமிரம் இவை சுவஸ்தமாகும்.





சிவராமஜெயம்.

# பற்பசிந்தூரவகுப்பு.



முன் சொல்லிய லேகியங்களுடன் சேர்க்கவேண்டிய செந்தூரங்களும் அத்துடன் சில பற்பங்களும் கூறப்படுகிறது.

## தங்கபற்பம்.

தங்கரேக்கு ஒருவிராகனிடை கொண்டுவந்து சிறுபொடியாகக் கத்தரித்து கலுவத்திலிட்டு சித்தண்டத்தோல் இரண்டுவிராகனிடை பொடித்துப்போட்டு முள்ளுக்கீரைச்சாற்றால் ஒருஜாமம் அறைத்து மூசையிலிட்டு மேலோடுமூடி சீலைசெய்துகாய்ந்தபிறகு உலையிலிட்டு மூசை பழுக்கும்படி மூன்றுவிசை ஊதி அப்படியே உலையுடன்விட்டு மறுநாள்வரையிலும் ஆறியபிறகு எடுத்து சீசாவில்போட்டு வைத்துக்கொள்ளவும் பூரணாதிமுதலிய லேகியங்களில் சம்பந்தப்படுத்தி அருந்திவந்தால் தேகம் தங்கநிறமாயிருக்கும் இச்சாபத்தியம் நல்ல பசியும் தாதுபுஷ்டியுமுண்டாகும்.

## வெள்ளிபற்பம்.

மேற்படி தங்கபற்பம் செய்யும் பாகத்தைப்போலவே வெள்ளியையும் செய்து எடுத்துப்பார்க்கவும் கம்மலாயிருந்தால் அண்டத்துள் வெள்ளைக்கருவாலாட்டி பில்லைதட்டி 50-வரட்டியில் புடம்போட்டு மறுதின மெடுத்துக்கொள்ளவும் திருகடுகு திருபலாதி சமன்கொண்டு சூரணித்து ஒருவிராகனிடை சூரணத்திற்கு இரண்டு அரிசியிடை பற்பம்சேர்த்து அறைதொலா நெய்விட்டு யிழைத்துச் சாப்பிடவும் சகலவாய்வுங் கண்டிக்கும் தேகமிருகும் நல்ல பலமுண்டாகும் இந்த பற்பத்தை உயர்ந்த லேகியங்களுடனுஞ்சேர்த்து சாப்பிடலாம்.

## பவளச்சுன்னம்.

பவளத்தை பழச்சாற்றில் ஒருநாள் ஊறவைத்து மறுநாள் கழுகி உலர்த்தி கலசத்திலிட்டு எருக்கம்பால் மிதக்கவிட்டு ரவியில்வைக்க மெழுகாகும் உடனே யெடுத்து ஒரு ஓட்டில் எருக்கம்பழுப்புபறப்பி அதின்மேல் பவளத்தைவைத்து மேலும் எருக்

கம்பழுப்புப்புறப்பி ஓடுமூடி சீலைசெய்து முழப்புடம்போட கடுங் காரச்சுன்னமாகும் வெற்றிலையில் தடவி போட்டுக்கொள்ளலாம் சயரோகிகள் தாம்பூலத்தில்தடவிப் போட்டுவர நிவர்த்தியாகும்.

அபிரோக்குசெந்தூரம்.

கிருஷ்ண அபிரோக்கு பலம் 1, அன்னபேதி பலம் 1, வெடியுப்பு பலம் 1, எலுமிச்சம்பழச்சார்விட்டு 3-நாளரைத்து பில்லை தட்டி கலசத்தில்வைத்து மூடி சீலை வலுவாய்ச்செய்து 20-வரட்டியில் புடமிடவும் சகல வியாதிகட்கும் ஆகும்.

முன்கூறிய லேகியத்திற்குச் சேரவேண்டிய கணக்குப்படி கலந்து சாப்பிடவும்.

அயச்செந்தூரம்.

அயம் ராவின பொடி 3-நாள் பழச்சாற்றில் ஊறவைத்து நாலாநாள் ஜலத்தில் அலம்பிவிட்டு குப்பைமேனிரசம்விட் டரைத்து பில்லைதட்டிக் காயவைத்து 25-வரட்டியில் புடம்போடவும், மறுபடியும் பழச்சாற்றில் ஒருபுடம், கரசணுங்கண்ணிச்சாற்றில் ஒருபுடம், குப்பைமேனிச்சாற்றில்ஒருபுடம், மறுபடியுங் குப்பைமேனிச்சாற்றில் ஒருபுடம், இந்த ஐந்துபுடமும்போட்டு யெடுத்து வைத்துக்கொள்ளவும் இளைத்த தேகங்களுக்கும் சில லேகியங்களிலும் கலந்துக்கொடுக்கலாம் இளைத்தவன் யிரும்பைத்தின்ன வேணுமென்ற பழமொழியுண்டு.

அன்னபேதிச்செந்தூரம்.

2-பலம் அன்னபேதியை கல்வத்திலிட்டு பழச்சாற்றை மிதக்கவிட்டு மேலோடு மூடி சீலைசெய்து முழப்புடத்திலிட்டு ஆறிய பிறகு கலுவத்திலிட்டு சீசாவில் வைத்துக்கொள்ளவும் சகல சுரத்திற்கும் தேன் முலைப்பாலில் கொடுக்கலாம் இச்சாபத்தியம்.

வெள்வங்கபற்பம்.

ஒருபலம் வெள்வங்கத்தை யுருக்கி விளக்கெண்ணையில் சாய்க்க சுத்தியாய் அதன்பிறகு அவை ஈசலிறகுபோல் தகடடித்து பொடியாகக் கத்தரித்து பூவரசம்வேறு கனமாகக் கொண்டுவந்து அந்த வேரை ஒருபக்கம் துளைத்து மேற்படி பொடியைப்போட்டு துளைதெரியாமல் அதேவேரினல் தமர்போட்டு 2-3-மண்சீலைசெய்து கெஜபுடம்போட்டு மூன்றுவதுநாளெடுத்து சீலைத்

தட்டி உடைத்துப்பார்க்க பற்பமாயிருக்கும் அதை யெடுத்துச் சீசாவிற்போட்டு வைத்துக்கொள்ளவும்.

### இதற்கு அனுபானம்.

| | |
|---|---|
| சுக்கு | தாணிக்காய் |
| திப்பிலி | மாசிக்காய் |
| மிளகு | நெல்லிக்காய் |

இவை ஆறும் சமனிடைகொண்டு யிடித்து சூரணித்து வஸ்திரகாயம்செய்து ஒரு விராகனிடை சூரணத்திற்கு இரண்டுகுண்டு மணியிடை மேற்படி பஸ்பம் வைத்து அதை ரூபாயிடை பசும்நெய்விட்டுக் குழைத்துச் சாப்பிடவும் இப்படி 7-நாள் அல்லது 10-நாள் சாப்பிடவும் சூடு வெள்ளை பிரமேகம் வாய்வு இதுகள் தீரும் இச்சாபத்தியம்.

### கருமேகத்திற்கு.

கருமேகத்திற்கு மேற்படி பஸ்பத்தை இரண்டுகுன்றி யெடுத்து அரைரூபாயிடை பசும்வெண்ணெயிற்குழைத்து சாப்பிடவும் இப்படி இருபதுநாள் சாப்பிட்டு சரியான பத்தியமிருக்கில் கருமேகம் தீரும்.

### கருமேகத்திற்கு கெந்தகபற்பம்.

ஒருபலம் நெல்லிக்காய்கெந்தகம் கொண்டுவந்து மருதம்பட்டைவேண்டியது கொண்டுவந்து கொளுத்தி சாம்பலாக்கி ஒருபடி ஜலம்பிடிக்கும் மண்கலத்தில் அரைக்குடுவை மேற்படி சாம்பல்கொட்டி நன்று யழுத்தி கெந்தகத்தை நடுவில்வைத்து மேலும் சாம்பல்போட்டு அழுத்தமாக அழுத்தி உதடுமட்டும் சாம்பலழுத்தி வாய்ப்புரத்திற்கு ஓடுமூடி அடுப்பேற்றித் தீயெரிக்கவும் கலயத்தின் உதட்டைத்தொட்டால் சூடானது கைதாங்காத சமயமட்டில் யெரித்து யிரக்கிவைத்து அப்படியே ஆறியபிறகு சாம்பலை நீக்கி கெந்தகத்தை யெடுத்து குப்பைமேனியிலையை அரைத்து தேங்காய்ப்பிரமாண முத்தைக்குள் கெந்தியைவைத்து 3-சீலைசெய்து முக்கால்கெஜபுடமிட்டு அப்படியே ஆரியபிறகு எடுக்க பற்பமாகும் நெய்யில் தேனில் வெண்ணெயில் எதிலாவது அரிசியிடை பற்பம்வைத்துக் கொடுக்கவும் இப்படி அரைமண்டலம்கொடுக்க கருமேகம் தேகஊரல் இவைதீரும் இச்சாபத்தியம்.

### இதற்கு அனுபானம்.

முன்சொல்லியபடி அறைமண்டலம் மருந்து சாப்பிட்டு இச்சாபத்தியமிருந்தபிறகு ஸ்நானம்செய்துவிட்டு அகத்திக்கீரைவேர் யிடித்து தூளாக்கி ஒருபிடிபெடுத்து படிஜலத்தில் போட்டு கால் படி பொழுமாகக் காய்ச்சி யிறக்கி இருவேளையாக பாகித்துச் சாப்பிடவும் இப்படி 20நாள் சாப்பிட்டால் மேகஊரல் கருமேகம் தீரும் இந்த யிருபதுநாளைக்குள் தலைமுழுகக்கூடாது உடம்புமட்டில் குளிக்கலாம் இச்சாபத்தியம்.

### பவளபற்பம்.

ஒருபலம் பவளத்தை ஒருநாள் தண்ணீரில் ஊரவைத்துக் கழுவிப்போட்டு தேள்கொடுக்கிலையை யறைத்து அதற்குள் மேற்படிபவளத்தைவைத்துமூடி ஏழுசீலைசெய்துகாயவைத்து நூறெரு வில் புடம்போட்டெடுத்துப் பீங்கானிலிட்டு அதில் ஆவின்பால்விட்டு ரவியிற்காயவைத்து அப்பாலதை ஆலம்பழுப்பிற் கட்டி நெற்குழியில் 3-நாள் புதைத்தெடுத்து அனுபானங்களிலிட க்ஷயம் ஈளை மர்தாரகாசம் சிரங்கு சொரி முதலான மேற்காட்டிய ரோகங்கள் தீரும்.

### கல்நார்பற்பம்.

கல்நாரைச் சிறுதுண்டாய்ப் பிளந்து ஓட்டிலிட்டு அதற்குக் கீழுமேலும் கோங்கிலவப்பட்டையை இடித்துபோட்டு அப்பால் மேற்படிபட்டை கஷாயம்விட்டறைத்து 3-புடம்போட தவளம் போல நீறும் தேனிலாவது தாதுளை லேகியத்திலாவது கொள்ள சிலேத்மநோய் 96-ம் நீங்கும் மேககாங்கைதீரும் மேற்படி பற்பத்தைப் பல்விளக்கத் தந்தம் இருகும்.

### மேற்படி பற்பம்.

கல்நாரை சிறுதுண்டுகளாய் வெட்டி ஓட்டில்வைத்து அதற்குக் கீழுமேலும் எருக்கம்வேரையிடித்துத் தூளைப்போட்டு மூடி கெஜபுடம்போட்டு மேற்படி பாலிலறைத்து 3-புடம்போட்டு அனுபானத்திலிட மேற்படி வியாதிகள் தீரும் தந்தம் இறுகும்.

### சிங்கிபற்பம்.

சிங்கியென்னும் மான்கொம்பு 5-பலம்பெடுத்து சிறுதுண்டுகளாய் நறுக்கிக் குப்பைமேனிச்சாற்றில் ஊறவைத்து மேற்படி

யிலையை அரைத்து கவசஞ்செய்துக் காயவைத்து ஓட்டில் பரப்பி வைத்து மேலோடுமூடி சந்துவாய்ச் சீலைமண்செய்து ஐம்பதெரு விற் புடம்போட்டெடுத்து ஆவின்பால்விட்டரைத்து பில்லைதட்டி காயவைத்து முன்போற் புடம்போட பற்பமாகும் அநுபானங் களில் மேற்படி பற்பத்துடன் பவளபற்பம்சேர்த்துக் கொடுக்க நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, நீரெரிவு, க்ஷயம், ஈளை, இருமல், ஊஷ்ணம், மேககாங்கை தீரும்.

சிலாசித்துபஸ்பம்.

கரடில்லாத கற்பூரசிலாசித்து 5-பலமெடுத்து சிறுதுண்டுக ளாக நறுக்கி ஒருநாள்முழுதும் நல்லஜலத்தில் ஊறவைத்து மறு நாட்காலையிலெடுத்து அலம்பி இந்தப்படி ஐந்துநாள் அலம்பியெ டுத்துக்கொண்டு சிறுசெருப்படைச்சாற்றா லாட்டி பில்லைதட்டிக் காயவைத்து ஓட்டில் வைத்து மேலோடுமூடி சீலைமண்செய்து 50-எருவில் புடம்போட்டு ஆறியபின் னெடுத்து மேற்படிச் சாற் றாலாட்டி லேசாக பில்லைதட்டி புடம்போடவும் இப்படி 3-விசை புடம்போட்டெடுத்து சீசாவில் வைத்துக்கொண்டு பித்தயெரிவு பித்தவெட்டை நீர்க்கடுப்பு இவைகட்குப் பசும்வெண்ணெய்யில் கொடுக்கவும் இச்சாபத்தியம்.

வெண்காரபஸ்பம்.

ஒரு குடுவையில் மேற்படி சிலாசித்துபற்பம் கால்தாமிட்டு அதின்மேல் சுத்திசெய்த வெண்காரமிட்டு அதற்குமேலும் சிலா சித்துயிட்டு ஓடுமூடி சீலைமண்செய்து உலர்த்தி 10-எருவில் புடம் போடவும் நீர்க்கட்டு சுருக்கு அனல் இவைகட்கு வெண்ணெய் யில் பணவிடை கொடுக்கவும் தீராவிட்டால் முள்ளாங்கியிடித்த சாற்றில் இரண்டுபணவிடை கொடுக்க உடனே நீர்க்கட்டு உடை யும் இச்சாபத்தியம்.

இதின் உபயோகம்.

மேற்கூறியபடி அந்தந்த பற்பத்தை தனித்தனி உபயோகப் படுத்திக்கொள்ளலாம் அல்லது சிலாசித்துபற்பம், சிங்கிபற்பம், வெண்காரபற்பம், பவளபற்பம் இவையாவும் சமனிடைகூட்டிச் சீசாவில் வைத்துக்கொண்டு ஒருவேளைக்கு பணவிடையெடுத்து பசும்வெண்ணெயி லிழைத்துச் சாப்பிடவும் இப்படி இருவேளை யும் 3-நாள் தின்றால் சகல ஊஷ்ணமும் தீரும் நீர்க்கட்டும் நீர்க்

ளிச்சனம் வாய்வு உடம்பெரிவுயாவும் தீரும் திரோகநிதானத்திற் குத்தக்கபடி 3-நாள் 5-நாள் 7-நாள்சாப்பிடவும் இச்சாபத்தியம்.

கஸ்தூரிமெழுகு.

| | | | | |
|---|---|---|---|---|
| கஸ்தூரி விராகனிடை | 1 | சவ்வாது விராகனிடை | | கால் |
| பச்சைக்கற்பூரம் ,, | 2 | பூநீக்கிய லவங்கம் | ,, | 4 |
| கோரோசனை ,, | 4 | வால்மிளகு | ,, | 4 |
| குங்குமப்பூ ,, | 4 | ஏலக்காயரிசி | ,, | 8 |
| புனுகு ,, | கால் | சிறுலவங்கப்பட்டை | | 8 |

இதில் சூரணஞ்செய்பவைகளைச் சூரணித்து யாவுங்கூட்டிக் கல்வத்திலிட்டு கம்மாறுவெற்றிலைச்சாற்றில் ஒருஜாமமறைக்கவும் கற்பூரவல்லிச்சாற்றில் ஒருஜாமம், தூதுவேளைச்சாற்றில் ஒருஜாமமாட்டி, நீக்கிய இஞ்சிச்சாற்றில் ஒருஜாமம், மிளகுக்கியாழத்தில் ஒருஜாமம், சித்திரமூலம்வேர் கியாழத்தில் ஒருஜாமம், மஞ்சள் கரசனுங்கண்ணிச்சாற்றில் ஒருஜாமம் இப்படி தனித்தனியாய் ஒவ்வொருஜாமம் அறைத்து கலுவத்துடன் நிழலிலுலர்ந்தபிறகு சுபமான தேனினல் மெழுகுபதமா யறைத்து வழித்து பத்திரம் பண்ணிக்கொள்ளவும் பயறுப்பிரமாண மெடுத்து தேனில்துவட்டிக்கொடுக்கவும் இப்படி இருவேளையும் 3-நாள் 5-நாள் கொடுக்கவும் ஜன்னி, சீதளம், சுரம், கபரோகம், உப்பிஷம், மாந்தம், முகவாதஜன்னி, சூதகஜன்னி, இருமல், மாரடைப்பு, நடுக்குவாதம் இவை தீரும் தேகதிடமறிந்து நாள் அதிகரித்தும் குறைத்துங் கொடுக்கவேண்டியது இச்சாபத்தியம்.



அகஸ்தியர் அருளிய

## சண்டமாருதச்செந்தூரம்.

### நொண்டிச்சிந்து.

பரிதிமதியுதித்த—திருப்
பார்க்கடல்சூழுமிப்புவிதனிலே
பெருகைமிகப்பெருகும்—மானிடர்க்கு
பொக்குவிபாதியின்கக்குவிஷத்தை
அறிந்தேகுருமுனிவர்—மனது
அன்புடன்மானிடர்தென்படவே

திரிந்தியதோர்விழ்தம்—சண்ட
மாருதமென்றொருசெந்தூரம்
சொன்னார்வெகுசுருக்கு—பெருந்
தொல்லைகளாகியஅல்லலில்லை
முன்னூல்மூலிகைச்சார்—நல்ல
முத்திடும்பட்டைகியாழமது
தன்னாலரைமால்—ரவியில்
தாக்கிடும்வெய்யலில்லையாமல்
தானுனைஒட்டிவிட்டு—மூடி
சந்துவாய்சீலைகள்செய்யாமல்
புடம்போட்டுமாயாமல்—கள்ளன்
பொக்கிஷக்காலடிக்கண்டதுபோல்
திடம்பெற்றசெந்தூரம்—அதி
சீக்கிரம்செய்திடும்தொழில்முறைகேள்
பூரந்திசையிடையாம்—அதில்
பூட்டிடுலிங்கந்திக்கிடையாம்
வீரம்வினையிடையாம்—இன்னம்
வேட்டியகெந்தியும்வீரனிடை
செந்தூரம்ஓரிடையாம்—இதில்
சேர்ந்தசரக்கெல்லாம்சுத்திசெய்து
சந்தோஷமாகவேதான்—அம்மி
தன்னிலிருஜாமம்தானரைத்தால்
வர்னம்பவழநிறம்—அதில்
வந்திடுமுந்தன்மனங்குளிர
சொர்னமிதற்கீடோ—அதி
சொக்கிதுசொக்கிதுசொல்கிறேன்கேள்
திறமாகுங்குப்பிதனில்—யாவும்
திரட்டியறுகோணந்தன்னில்வைத்து
ஏகத்தியானம்செய்து—புட்டினில்
யேற்றும்பணவிடைசெந்தூரம்
நடுவினில்வைத்துருட்டி—நடு
நாவில்படாமல்முழுங்கிடவே
படுபாவிவியாதியெல்லாம்—நினைத்தால்
பறக்குமிதன்பேர்சொல்லிடவே ,
ஜன்னிபதின்மூன்றும்—கர்மம்

தாக்கிடுங்குஷ்டமெட்டுவகை
பின்னேழுதோஷமும்போம்—சொன்ன
பிலிகையெட்டுமகோதரம்போம்
வாதங்களொன்பதுவும்—கிட்டி
வந்திடும்பட்சம்தனுர்வாதம்
ஓதும்விளைவாதம்—வலியும்
உத்தமுடக்குநடுக்கலுடன்
அசதியுங்கணுவாதம்—புண்ணு
அணைகிரந்திசூலையுடன்
கண்டத்தின்மாலையுடன்—உள்ளங்
கைதனிலூரல்கருமேசம்
வண்டுகடிகளும்போம்—கொடிய
வல்லபல்விஷத்தொல்லையும்போம்
சைத்தியந்தானேழும்—கொடி
நாகப்போனிபுத்துவிடும்
வைத்தியஞ்செய்கிறவன்—வலு
வாகிப்வியாதிக்கனுபானம்
தெரியாமல்செய்தாக்கால்—அவனை
தொடரும்வியாதிநானென்சொல்வேன்
குறைபறவனுபானம்—திறமாய்
தூர்ந்திடில்சந்தோஷமாய்விடுமே. (தந்தினத்)

இதற்கு விபரம்.

| | | |
|---|---|---|
| பூரம் | விராகனிடை | 4 |
| லிங்கம் | ,, | 8 |
| வீரம் | ,, | 2 |
| நெல்லிக்காய்கெந்தி | ,, | 2 |
| ரசச்செந்தூரம் | ,, | 2 |

இவைகளை இங்ஙனம்கூறிய யிடைபோல்கூட்டி அறைத்தால் மாத்திரம் வாய் பிடிக்காது குழந்தைகள்முதல் சகலருக்கும் கொடுக்கலாம் மேற்படி யிடைபோல்போட்டு 2-ஜாமமறைத்து சோவில் வைத்துக்கொள்ளவும் சகல வியாதிகட்கும் உபயோகப் படுத்தலாம் கைகண்டது இச்சாபத்தியம்.

# அகஸ்தியர் மூலிகை வயணம்.

சம்புடனேவேர்விரையை உண்பவாதன்கிராணிமூலம்
தெம்புடனேதீருமென்று கும்பமுனிதானுரைத்தார்
சித்திரபுரத்துமூலம் மெத்தஆவலாய்க்கொணர்ந்து
சத்தாகிலுங்கியாழம் வைத்தாகிலும்குடிக்கில்
பித்தமொடுசித்தமும் பெருத்ததொருமேல்வயறும்
அத்திசாரதாகமுடன் இத்தனையுமேபேகிவிடும்
நிலவாகைவேருரைக்கில் மலைபோலேஊதுவய
றலையாகுலையுமது நிலையாதுபேகும்நிஜம்
தும்பையதுதான்குடிக்கில் அம்பலத்துவேர்கொடியை
பம்பரம்போலேகுழைத்து தின்பவர்வயற்றுளைபோம்
கரிசலாங்கண்ணிமதம் பிரியாவசியமது
கரியாமிளகோடுண்ண சரியாதுபாண்டுருமல்
அவர்பிரமேகமேயகற்றுமே.

சங்கநிலைவேர்ப்பொடியை உங்கலத்தில்மேகமெல்லாம்
இங்கிதமாயேகுமென்று மங்கைபாகர்தானுரைத்தார்
தழுதாழைவேர்சமூலம் வழுவாமலேகொணர்ந்து
நழுவாமலேயறைத்து விழுதோடவேயுணர்வை
சித்தமதில்வாதமெல்லாம் மெத்தவதில்சூலைகளும்
சத்தில்லாதோடுமித மற்றவிஷச்சூனியமும்
கொத்தானும்வேர்சமூலம் மெத்தாகவேயெடுத்து
விஸ்தாரமாயறைத்து மெத்தஆவலாயுணர்வை
கட்டுகள்வலத்துசீதம் விட்டுவிடுமேபிடிப்பில்
குட்டுவலித்தானுமது திட்டமுடன்செய்யகனும்
முக்கானனையின்வேளை சுக்காகவேயுலர்த்தி
திக்காமலேயிடித்து விக்காமலேயருந்த
வயறாறும்பேதிகளும் சுயரூபமாஞ்சுரமும்
தயவாகவேயடங்கும் நயமாகுங்காயசித்தி
ஆதண்டத்தலைவலி யகத்துமே.

கொல்லன்கோவைக்கிழங்கை நல்லஆவின்பாலிலுன்ன
மெள்ளவேவிஷங்களது வில்லடைவில்லாமலோடும்

முத்தமெனும்மூலமதில் மெத்தவயிற்சேடனிற்குஞ்
சத்தமொடுதாகமுடன் நிற்குமுன்னில்லாதுசொன்னேன்

இன்பூறல்வேர்சமூலம் தென்பாகவேகொணர்ந்து
தம்பிரானையேனினைந்து தென்பதாகவேயுணர்வை

குத்திருமல்கோழைஜலம் நாற்றமொடுசீழகலும்
ஆத்திவிடுமேசுவாசம் பார்த்துபதமாயுணர்வை

சிவனார்தன்வேம்புதன்னை நவநாதர்பேர்வழுத்தி
உவமாகவேயுணர்வை தவமாகுங்காயசித்தி

பங்கபஞ்செய்நீளுலகில் சங்கமற்றமூலிகைநூல்
மங்கைபாகர்சொன்னபடி சிங்காரமாயானுரைத்த
வாடாதோடை தோஷமகற்றுமே.

கொல்லன்பகவாளிவேரை மெல்லக்கெல்லியேகொணர்ந்து
நல்லகுருவையரிசி மெள்ளயிடித்தேயடுப்பில்

பிட்டாகவேயவித்து மட்டாகவேயருந்த
கெட்டோம்கெட்டோமென்று விட்டோடும்மேல்வலிப்பு

பண்ணுறும்பூவுலகில் நன்னாரிவேரதனை
மின்னாரவேகொணர்ந்து தின்னாரவேயகல்நோய்

சோகைக்காமாலைபித்தம் தாகமுடனேயகத்தி
வேகமானவெப்புதோஷம் போகபிரமியந்தீரும்

கூளாத்திநெற்கள்ளியிலை மீளாதநெற்பவலி
தாளாமலோடுமென்று காளத்திநாதருரை

குப்பையெனுமேனிதன்னில் உப்பிஷங்கள்போக்கிவிடும்
அப்பையதில்கோழைஜலம் துப்புறவாய்தானிறுத்தும்
செப்பிய மகத்துவத்தைப்பாருமே.

பூவரசில்வேரனேகம் பேகிவிடுமேகரப்பான்
கூவிளையில்வெப்பெரிப்பு தீவினைகளோடிவிடும்

கொடிவேலியானதொரு கெடியானமூலிகையில்
துடியானஅஷ்டகுன்மம் பொடியாகுமேகிரந்தி

நெக்குன்றிநாமமதை முக்கியமுடனுரைக்க
கக்கிஷத்தலையின்நோவு மத்தினத்திலோடிவிடும்

தூதுவேளையானகற்பம் வேதமொளியாளேபித்தம்
வாதமொடுசளேசத்தி தாகமொடுதாதுபுஷ்டி

சம்பிரமுடனேகவு தும்பையெனுமூலியது
வம்புபடுரத்தமூலம் தம்பன்மதாகும்சொன்னேன்

உள்ளபடியேபருகு வெள்ளேயதின்வேர்கொணர்ந்து
மெள்ளதினமேயருந்தச் சள்ளேபிரமியந்தீரும்
ஆடுதின்னுப்பாளேப் புழுவாற்றுமே.

வெள்ளேயெனுஞ்சாரணியில் கள்ளிவிளிநோய்களும்
முள்ளியின்கருக்குரைக்கு பல்லின்வலிதானகலும்

கற்பூரவள்ளியிலே வைப்பாகவுண்பதற்கு
வெப்பாரிக்குத்தகலும் அப்பாரில்பாண்டுவுக்கு

சூரியன்றன்காந்திதனிற் சேரும்வெப்புச்சாந்தியதாம்
மீருமதிகாந்திதனில் மேருகுளிர்ப்போந்துவிடும்

கொட்டையெனுமக்கரத்தை திட்டமுடனேயுதவ
மெட்டினில்வடித்தருந்த வெட்டையதகலுஞ்சொன்னேன்
ஆகாசக்கெருடன்விஷ மாற்றுமே.

கொம்பரக்குவேரநேகம் வம்புசுரப்போயகலும்
தென்பதுறும்காயசித்தி இன்பமுடனேயருந்த

பாசிதனில்நீர்கிரிச்சல் தோஷமொடுசூலேயரும்
ஆவைகுத்துப்பாலேதனில் மாச்சுவிடுமேபரவை

வைத்தியிலூதுவயி றுண்ணத்தீருமென்றுமிக
சின்னியிலேச்சிறுசெறு தன்னில்வாரணமகலும்

கோளியாவரைதனில் நீள்சுளிகணேகளோடு
ஈளேவயிறாதல்வெப்பு கோளேமாந்தகாசமறும்

சுண்டையதின்வேர்பொடியின் மண்டையதிநீரகற்றும்
என்சொல்லியகடிகள் வண்டுகொல்லியாலோடும்.

பாதிரிவேரநேகம் சாதுரிகமானதொளிர்
நாதரருள்காணவென்று ஓதுமுனிவர்சொல்
ஆற்றாலி அஷ்டகுன்ம மாற்றுமே.

விச்சுயெனுமூலிகையில் பச்சைநல்லப்பாடல்காந்து
கொச்சையுள்ளமாதருக்கு கச்சகதவாசையுண்டு

பூராயமானதொரு தோராதகுனியங்கள்
ஆராதாம்மதனல் மீராதகலுங்கண்டீர்

மல்லாரையென்றும்மிக சொல்லாதநற்கனைகள்
வெல்லாதவாதமென்னும் பொல்லாதநோயகலும்

எட்டிபுடவேர்வையில் குஷ்டம்பதினெட்டுமோடும்
திட்டமுடனேவிசும் அஷ்டகுன்மமேயகலும்

நீலியுற்றவேரில்வளக் கோலியுற்றநஞ்சகலும்
வேலியுற்றமேபருத்தி யாலேயுற்றவாதமறும்

கிலவேம்பினல்சுரங்கள் மலைவேம்பிலோடும்ஜன்னி
இலைவேம்பில்கட்டுவயர் தலைவேம்பினுண்டநேகம்

குண்டுமணியின்கொடியால் உண்டநேகமேல்விரோதம்
செண்டுமுலைமாதர்வந்து கண்டுகொள்ளுவார்கள்நிதம்
அத்திவேர் வயிர்கடுப்பை யாற்றுமே.

குண்ணிதன்வோர்வுணவை ஜன்னியுடன்வேர்வைமெத்த
நண்ணியசுரோணிதமும் விண்ணில்கண்டோடும்சிறு

பிள்ளைநீரகட்டலும் வெள்ளைவாதங்களோடும்
தள்ளையோடாமூலியிலே மூளைநோய்கள்தானகலும்

வட்டமெனும்பிரமி தட்டதட்டச்சுரம்போகும்
குட்டியவிளாவுங் குமட்டிவரும்வாந்திசத்தி

பேய்ப்பீர்க்குனலரத்தை வாய்பார்க்கவேவுணர்வை
போய்ப்பாயும்நஞ்சுவிஷம் சாய்ப்பாகவோடிவிடும்

பங்கதனில்மூலிகையின் மங்குசொரித்தேமல்களும்
பொங்கியண்டவாதசன்னி இங்கிதமாயேகிவிடும்

மூலிகைப்பிரயோகமே சகலருக்கும்
ஈசன்துணையாகுமே.

பார்வதிபரணியமென்னும்

விஷவைத்திய சிந்தாமணி

முற்றிற்று..

———

